இப்போது
புதிய
தோற்றத்தில்!




**ஸ்வஸ்திக்
பெர்ஃப்யூம்டு
கேஸ்டர் ஆயில்**

பரட்டையான படியாத
கேசத்தையும் பணியவைக்கும்
நாள் முழுதும் கேசத்தை
எடுப்பாக எழிலோங்கச்
செய்யும்.

பட்டுப்போன்ற படியும் கேசம்...
ஒளிசிந்தும் எழிலோங்கும் கேசம்...
ஆரோக்கிய நறுமணம் வீசும் கேசம்...,
நாள் முழுதும் எடுப்பாக விளங்கச்
செய்கிறது ஸ்வஸ்திக் பெர்ஃப்யூம்டு
கேஸ்டர் ஆயில்.

ஸ்வஸ்திக் ஆயில்
மில்ஸ், பம்பாய்.

Shilpi SOM 17/69 TAM

# கல்கி பொருளடக்கம்



சாதாரண, ஆடி 10 : 1970, ஜூலை 26



சிறுகதைச் சிறப்பிதழ்




| சந்தா விவரம் | ஒருவருடம் | ஆறுமாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ. 20-00 | ரூ. 10-00 |
| இலங்கை (இலங்கை நாணயம்) | ரூ. 21-00 | ரூ. 10-50 |
| இதர நாடுகள் | ரூ. 40-00 | ரூ. 20-00 |


இதென்ன தகாத கூட்டணி?
தீவிர வாதிகள்
கம்யூனிஸ்ட்


ஸ்தாபன காங்கிரஸ்
சுதந்திரா
ஜன சங்கம்


பெண் யானையிடம் மயங்கி, மூடிய படுகுழியில் விழவிருக்கும் நாடு
இந்தியா
அந்நியக் கடன்



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

மலர் 29 ● இதழ் 52



# ஆகாயக் கோட்டை

ஜனநாயகத்தைக் காப்பாற்றவும், கம்யூனிஸ்டு ஏகாதிபத்தியங்களின் ஆக்கிரமிப்புக்கு இரையாகாதபடி தேசத்தைப் பாதுகாக்கவும் பயனுள்ள கூட்டணி ஒன்றை நிறுவ வேண்டுமென ஸ்ரீ காமராஜ் கூறியிருக்கிறார். இதற்கு வரவேற்பு எப்படி இருந்தாலும் சுதந்திரக் கட்சியின் பணி என்ன என்பது தெளிவு. அரசியல் தலைவர்களுக்கும், பாமர மக்களுக்கும் அறிவு விளக்கம் ஏற்படக் கூடிய விதத்தில் தொடர்ந்து அது பாடுபட்டு வர வேண்டும். கட்சிகளும், தனி நபர்களும் அதிகாரத்தைத் தம் வசப்படுத்திக் கொள்வதற்காகக் கையாளும் வழிமுறைகளை அது அம்பலப்படுத்த வேண்டும்.

உண்மைக்கும், நேர்மைக்கும் மதிப்புத் தருகின்ற பிற கட்சிகளுடன் ஆட்சிப் பொறுப்பைப் பகிர்ந்து கொள்ளக்கூடிய வாய்ப்பு வந்தால் சுதந்திரக் கட்சி இப்பொறுப்பைத் தட்டிக் கழிக்காது. ஆனால் அதிகாரத்தைக் கைப்பற்றுவதே சுதந்திரக் கட்சியின் நோக்கமல்ல. அதிகாரத்தில் இருப்போருக்கும் மக்களின் ஆதரவுடன் ஆள முன் வரும் தலைவர்களுக்கும் எது சரி, எது நியாயம் என்பதை அறிவுறுத்திக் கூறுவதே அதன் பணி.

தேர்தல்களுக்குச் செலவு மிக அதிகமாகிறது. பதவியில் இருப்போர் தவிர மற்றவர்களுக்கு இவ்வளவு செலவழிக்கக் கட்டி வராது. பெர்மிட் லைசென்ஸ் ராஜ்யத்தின் கடிவாளம் தன் கையில் இருப்பதால் வேண்டிய நிதியைத் திரட்ட ஆளுங் கட்சியினரால் முடியும். மற்றவர்களுக்கு இது சாத்தியமல்ல. தாம் கொடுக்கும் பணம் நாட்டைப் பாழ்படுத்துபவர்களுக்குத்தான் போகிறது என்பதைத் தெரிந்து கொண்டே தொழில் வர்த்தகத் துறையினர் ஆளும் கட்சிக்கு நன்கொடை தருகிறார்கள். அரசின் உடனடியான தயவுகள் அவர்களுக்குத் தேவைப்படுகின்றன. சர்வாதிகார ஆட்சி முறையின் கீழ், அன்றன்றைக்குக் காலம் தள்ளினால் போதும் என்றாகி விடுகிறது. தேச பக்தி உள்ள முதலாளிகள் சுதந்திரக் கட்சி வளர வேண்டும் என்று விரும்புகிறார்கள். ஆனால் அதற்கு வேண்டிய உதவியை அவர்கள் அளிக்கவில்லை. இதே சமயத்தில், தமது பதவியைப் பண பலம் கொண்டு காப்பாற்றிக் கொள்வதற்காகப் பத்து கோடி ரூபாய் வசூலிக்கப் பிரதம மந்திரி ஸ்ரீமதி காந்தி திட்டமிட்டிருக்கிறார் என்று பத்திரிகைச் செய்தி காண்கிறோம்.

நாட்டுக்குச் சேவை புரிவதற்குப் போதுமான ஸ்தானங்கள் தேர்தலில் கிடைத்தால் சுதந்திரக் கட்சி திருப்தி அடைந்து விடும். தேர்தல் நடைமுறைகளை மாற்றி, செலவைக் கணிசமாகக் குறைக்க வேண்டும். கட்சிகளும், அபேட்சகர்களும் செய்யும் செலவைச் சட்டத்தின்மூலம் வெகுவாகக் குறைக்க வேண்டும். பெர்மிட் — லைசென்ஸ் வழங்கும் அதிகாரத்திலிருந்து ஆளும் கட்சி விலக்கி வைக்கப்பட வேண்டும். இப்படிச் செய்யாவிடில் பார்லிமெண்டுடன் கூடிய ஜனநாயக ஆட்சி முறை அதோகதியாகிவிடும்.

மக்கள் இன்புற்று வாழ வேண்டுமானால் அவர்களது ஆன்மிக, பொருளாதார அடிப்படைகளைப் பலப்படுத்த வேண்டும். ஆன்மிக பலத்தை மட்டம் தட்டுவதும், ஆகாயக் கோட்டைகளை மனக் கண்முன் தோற்றுவித்து ஏமாற்றுவதும், மக்களுக்குத் தீமையையே விளைவிக்கும். அதிகாரம் தங்கள் கைக்கு வந்துவிட்டால் மக்களுக்கு எல்லா வசதிகளையும் செய்து தர முடியும் என்று சிலர் நினைப்பது பெருந்தவறு. சத்தியத்தில் இடையறாது நம்பிக்கை வைத்து உழைப்பதன் மூலம்தான் நாடு சிறக்கும். மக்கள் தாமாக முன்வந்து, உழைத்துச் செல்வத்தைப் பெருக்கினால் ஒழிய ஐம்பது கோடி பேர்களைக் கொண்ட இந்தச் சமுதாயத்துக்கு மகிழ்ச்சியுடன் கூடிய வாழ்வு கிடைக்காது. உற்பத்தி பெருகினால்தான் நியாயமான விநியோகம் சாத்தியமாகும். வரி போட்டு

நிதி இரட்டிப் பெரிய அளவில் சர்க்கார் தொழில் மூலம் உற்பத்தியைப் பெருகச் செய்யலாம் என்பது ஆகாயக் கோட்டை. அரசாங்க நிர்ப்பந்தத்தைப் பயன்படுத்தி ஒரு சிறிய நாட்டை உற்பத்தியில் ஈடுபடுத்த முடியும். ஆனால் ஐம்பது கோடி மக்கள் விஷயத்தில் இதைச் செய்ய இயலாது. மக்கள் மனப்பூர்வமாகவும் சுயேச்சையாகவும் உழைத்தாலொழியப் பயன் கிட்டாது.

உழைப்பைப் பகிர்ந்து கொள்வது, ஒவ்வொரு நாடும் ஒவ்வொரு வகை உற்பத்தியில் விசேஷ கவனம் செலுத்துவது, வர்த்தகத்தில் சுதந்திரம், பொருளாதாரத் துறையில் முடிவெடுக்கும் அதிகாரம் பரவலாக விநியோகப்பட்டிருப்பது — ஆகிய இந்தப் பழைய பொருளாதாரக் கோட்பாடுகள் அடிப்படையில் உண்மையானவை என்பது இப்பொழுது மீண்டும் உணரப்பட்டுள்ளது. ஜப்பான் போன்ற நாடுகளுக்கு இதற்காக நாம் கடமைப்பட்டுள்ளோம். பொருளாதார சுதந்திரத்தின் மூலம் சுபிட்சத்துக்கு வழி செய்ய முடியும் என்பதை இந்த நாடுகள் மெய்ப்பித்துள்ளன. சர்வாதிகாரிகளிடம் அதிகாரத்தை ஒப்படைத்துவிட்டு எல்லோரும் அடிமைகளாக ஆகி, பொருளாதார சுபிட்சத்தை அடைந்துவிடலாம் என்று மக்கள் இன்னும் நம்பினால் அதற்குக் காரணம் கல்வி அறிவு இன்மையே. நல்ல அறிவுரையின் மூலம் அவர்களை மாற்ற வேண்டிய பொறுப்பு சுதந்திரக்கட்சி யுடையதாகிறது.

பொருளாதாரத் துறையிலும் இயற்கை நியதிகள் உண்டு. இந்த இயற்கை நியதிகளுக்கு எதிர்நீச்சல் போட்டு ஜெயிக்க முடியாது. அநீதியையும், கொடுங்கோன்மையையும் எதிர்த்து வெற்றிகரமான புரட்சிகள் நடக்கக் கூடும். ஆனால் இயற்கையை எதிர்த்துப் புரட்சி செய்ய முடியாது. அதற்குப் பணிந்து கொடுத்து அதன் ஒத்துழைப்பைப் பெற வேண்டும். விஞ்ஞான தொழில் நுட்ப அபிவிருத்தி வேறு, பொருளாதார வளர்ச்சிச் சுபிட்சம் வேறு என்று கருதலாகாது. நாட்டின் சுபிட்சத்துக்கான நமது திட்டங்களை நடத்திவைப்பதில் இயற்கை நியதிகளை ஏற்றுக் கொண்டு அவற்றுக்கு இசையச் செயலாற்ற வேண்டியதே நாட்டின் தேவை.

**(''ஸ்வராஜ்யா''வில் ராஜாஜி எழுதியது)**

# ராஜாஜியின் கருத்துக்கள்

தமிழ் நாட்டுப் பள்ளிக்கூடங்களில் ஏழாவது வகுப்புகளுக்கு வைத்திருக்கும் சில பாடப் புத்தகங்களை உடனடியாக வாபஸ் பெற வேண்டும் என்று தமிழரசுக் கட்சியின் பொதுக் காரியதரிசி ஸ்ரீ சி. ஆர். சந்தானம் விடுத்துள்ள வேண்டுகோள் உடனடியான கவனத்துக்குரியது. அவர் சொல்கிறபடி இப் பாடப் புத்தகங்கள் கலப்பற்ற கட்சிப் பிரசாரமாகத்தான் இருக்கின்றன. அரசியல் என்பது வரலாறாக மாறிப் பள்ளிக் குழந்தைகள் மீது திணிக்கப்படுவதற்கு அவகாசம் தேவை. அகால மரணம் அடைந்து விட்டதால் அரசியல் தலைவர்களுக்கு வரலாற்று முக்கியத்வம் ஏற்பட்டு விடாது. இத்தகைய நூல்கள் பள்ளிப் பாடப் புத்தகங்களாக வைக்கப்படுவதில் உள்ள இங்கிதக் குறைவு வியக்தமானது. இத்தகைய செயல் திராவிட முன்னேற்றக் கழகத்துக்கு அபகீர்த்தியை விளைவிக்கக் கூடும். இது தவிர்க்கக் கூடியதே!

★

காச்மீரின் அந்தஸ்தை மாற்ற முடியாது என்று ஸ்ரீமதி இந்திரா காந்தி வற்புறுத்திக் கூறியிருக்கிறார். ஆனால் இந்தியா, பாகிஸ்தான் உறவு முறை மாறித்தான் ஆகவேண்டும். அயல்நாடுகளில் பெரிய தொகைகளைக் கடன் வாங்கி இரு தேசங்களும் ஆயுதப் போட்டியில் ஈடுபடுகின்ற நிலைமை இந்த ஆட்சியின் கீழ் நிலைத்துவிடக் கூடும். இதன் விளைவாகத் தேசம் திவாலாகி விடுவதுதான் மிஞ்சும். காச்மீரை வைத்துக் கொண்டு அதே சமயத்தில் ஆயுதப் போட்டிக்கும் முடிவு கட்டுவதற்கு இதுவரை எவரும் வழி முறை கூறவில்லை. வாக்கெடுப்பு இல்லாமல் காஷ்மீரை வைத்துக் கொண்டிருப்பதற்காக இந்தியாவையே நாம் நாசம் செய்வதா? தைரியமாக இந்தக் கேள்விக்குப் பதில் கூறியாகவேண்டும். நமக்கு மனத் தெளிவு ஏற்பட்டு, பிரத்யட்ச உணர்வுடன் செயலாற்றும் வரையில் கம்யூனிஸ்ட் சீனா காத்துக்கொண்டிருக்குமா?

மக்களது கருத்தை அறியக் காச்மீரத்தில் வாக்கெடுக்கப்படும் என்று கொடுத்த உறுதி மொழியைப் புறக்கணித்து, 'என்னவாயினும் சரி, காச்மீரை விடாமல் பற்றிக் கொண்டிருப்பதே கடமை, பெருமை' என்று சொல்லுவதில் ஸ்ரீமதி இந்திரா காந்தியுடன் பழைய காங்கிரஸ் போட்டியிட்டு வருகிறது. இவ்விஷயத்திலும் நாசகரமான ஆயுதப் போட்டி நீடிப்பதை விரும்புவதிலும் ஸ்ரீமதி இந்திராவுக்கு மாறாக நடக்கப் பழைய காங்கிரஸ் தலைவர்கள் பயப்படுகிறார்கள். ஆயுதப் போட்டியால் நம் நாடு நாசமடைவதைக் கவனியாமல் பாகிஸ்தான் நாசமடைவது குறித்துத் திருப்திப்படுவது மதியீனமாகும்.

# என்ன சேதி?

## உலகத் தமிழ் மகாநாடு

மூன்றாவது உலகத் தமிழ் மகாநாடு பிரான்ஸ் நாட்டின் தலைநகரான பாரீஸில் சிறப்பாக நடைபெற்றிருக்கிறது. இம்மகாநாட்டுக்கு உலகத்தின் பல்வேறு பகுதிகளிலிருந்து — 39 நாடுகளிலிருந்து — பிரதிநிதிகள் வந்து குழுமி ஆராய்ச்சிப் பரிவர்த்தனை செய்து கொண்டிருக்கிறார்கள். இந்த மகாநாட்டைத் தொடங்கி வைத்த தமிழக முதலமைச்சர் விண்வெளிச் சகாப்தத்தின் தேவைகளை நிறைவு செய்யும் அளவுக்குத் தமிழ்மொழி

வளர்ச்சி யடைய வேண்டும் என்று கூறி, அதற்கான வழி வகைகளைக் காணுமாறு மகா நாட்டுப் பிரதிநிதிகளைக் கேட்டுக்கொண்டார். அத்துடன் பெரிய ஆங்கில — தமிழ் அகராதி தயாரிக்குமாறும் கேட்டுக் கொண்டார்.

தமிழ் நாட்டிலிருந்து சென்ற பிரதிநிதிகளின் தலைவரான மந்திரி திரு மதியழகன் மகாநாட்டில் கலந்து கொண்டு உரையாற்றிய போது, ''தமிழரல்லாதவர்கள் சேர்ந்து தமிழ்மொழி பேசாத ஒரு நாட்டில் தமிழ் ஆராய்ச்சி மகாநாட்டை ஏற்பாடு செய்திருக்கிறார்கள். இப்படிச் செய்திருப்பது இதுவே முதல் தடவையாகும்'' என்று இம் மகா நாட்டின் தனித் தன்மையை எடுத்துரைத்தார்.

இன்று தமிழ், தமிழ் நாட்டில் மட்டுமின்றி, இலங்கை, மலேசியா, மோரீஷியஸ், சிங்கப்பூர், பீஜி ஆகிய பல நாடுகளிலும் நிலவுகிறது. இவர்களைக் கணக்கெடுத்தால் பத்துக் கோடி மக்களுக்கு மேலிருப்பார்கள்.

இத்தனை கோடிப்பேர் பேசும் தமிழ்மொழி இரண்டாயிரம் ஆண்டுகளாக அரும் இலக்கியச் செல்வம் பெற்று, வழக்கொழியாமல் இன்னும் மக்கள் நாவில் நடமாடும் மொழியாக இருந்து வருகிறது. இதுவே மேனாட்டு மொழி இயல் வல்லுநர்க்கு இம்மொழியில் அக்கறை கொள்ளவும் இம்மொழியைப் பயிலவும் ஆர்வமூட்டி வந்திருக்கிறது.

ஆனால் நாம் பழம் பெருமை மட்டும் பேசிக் காலத்தைக் கழிக்காமல் விண் வெளி யுகத்துக்கு ஏற்ப மொழியை வளர்க்க முயல வேண்டும் என்று நமது முதல்வர் கூறியிருப்பது வரவேற்கத் தக்கதாகும்.

ஆங்கிலம் இன்று வளர்ந்துள்ளதென்றால் லத்தீன், கிரேக்கம், பிரஞ்சு முதலிய மொழிகளிலிருந்து சொற்களையும் கருத்துக்களையும் தனதாக்கிக் கொண்டுள்ளது. ஏன், தமிழிலிருந்துகூடச் சொற்களை எடுத்துக்கொண்டுள்ளது. ஆனால் இன்று தமிழ் நாட்டில் ஒரு சாரார், தமிழில் வள்ளுவர் காலந்தொட்டு அழகாகச் சேர்ந்துள்ள பிறமொழிச் சொற்களைத் தேடிப்பிடித்து விரட்டிச் செயற்கையாகப் புதுச் சொற்களை முழுப் பொருளும் தராத வகையில் தயாரித்து வழக்குக்குக் கொண்டுவர முயல்கிறார்கள். பொருளில் அக்கறை கொண்டு சொற்கள் எம்மொழிச் சொற்களாயினும் பரவாயில்லை என்று எடுத்துக் கையாண்டால் தமிழ் வளர ஏதுவாகும்! வாழ்க தமிழ் மொழி! வளர்க தமிழ்க் கலைச் செல்வம்!

## வாழ்வளியுங்கள்!

சமீபத்தில் மதுரை அருகேயுள்ள ஹனுமப்பட்டி கிராமத்தில் வெகு நேர்த்தியான துணி தயாரிப்பில் ஈடுபட்டுள்ள ஒரு நெசவாளர் குடும்பத்தில் ஆறு பேர் பசிக் கொடுமையினாலும் ஏழைமையினாலும் தற்கொலை புரிந்து கொண்டது பரிதாபத்துக்குரியது. இப்படி எத்தனையோ மூலைமுடுக்குக் கிராமங்களில் நெசவாளிகள் துயரங்களுக்குள்ளாகி யிருக்கின்றனர்.

தேசத்தில் உள்ள கைத்தறி நெசவாளர்களின் பிரதிநிதிகள் ஜூலை 10ந் தேதி கைத்தறி ஏற்றுமதி காரியாலயத்தில் அதன் தலைவர் திரு சோமப்பா தலைமையில் கூடி, தங்களுக்கு நேர்ந்துள்ள கஷ்டங்களை வெளியிட்டார்கள்.

ஸ்டேட் பாங்கிகள் மூலம் நிதிவசதிகள் கிடைக்க வழி செய்ய வேண்டும்; காதி கமிஷன் போல் கைத்தறிக்கும் ஒரு கமிஷன் ஏற்படுத்திக் கைத்தறி வளர்ச்சிக்கு உறு துணை செய்ய வேண்டும்; (இதற்கான மசோதா தயாராகி ஐந்து வருஷங்களாகச் சிவப்பு நாடாவால் தூங்குகிறது!) கைத்தறித் துணிகளுக்கு ரூபாய்க்குப் பத்து பைசா ரிபேட் வழங்கி, இதை நாற்பத்தைந்து நாட்களுக்கு வழங்கி, முப்பது கோடி ரூபாய் மதிப்புள்ள கைத்தறித் துணிகள் (தற்போது முடக்கப்பட்டுள்ளவை) விற்பனையாவதற்கு வழி வகுக்க வேண்டும்; காபினெட் மந்திரி பதவியந்தஸ்துள்ள தனி மந்திரியை கைத்தறிக்கென்று நியமிக்க வேண்டும் என்று பல தீர்மானங்களை நிறைவேற்றி யிருக்கிறார்கள். மத்திய சர்க்கார் ஆவன செய்ய வேண்டும்.

மற்றொன்று: பட்டு, கைத்தறித் துணிகளுக்கு அயல்நாடுகளில் அமோகமான வரவேற்பு இருக்கிறது. ஆனால் தரமான துணிகள் வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட வேண்டும். ஒரு கோடி ரூபாய் மதிப்புள்ள துணிகள் தரமற்றவை என்பதால் திருப்பியனுப்பப்பட்டது நினைவிருக்கும்.

**போப்பாண்டவரோடு தமிழக முதல்வர் திரு மு. கருணாநிதி தம்பதியினர்**



# வெல்டிங் ஒரு மூன்றெழுத்து வார்த்தை

*அதற்குச் சிறிது விளக்கம் தேவை*

அந்த மூன்று எழுத்துக்கள் ஐஓஎல் என்பது தெளிவு. ஏனெனில் ஐஓஎல் (இந்தியன் ஆக்ஸிஜன் லிமிடெட்) வெல்டிங் தொழில் நுட்பத்தில் முன்னேற்றத்துக்கு எப்போதும் முன்னோடியாக இருந்து, இந்த நாட்டில் புதிய வெல்டிங் உத்திகளை புகுத்தியுள்ளது. அதே சமயத்தில் ஐஓஎல் நம் நாட்டிலேயே பலவகை வெல்டிங் சாதனங்களையும் அதற்குச் சம்பந்தமுள்ள வேறு பொருள்களையும் செய்துள்ளதோடு வேறு எங்கும் உள்ள சிறந்த தொழில் நுட்பவாதிகளுக்குச் சமமான வெல்டிங் தொழில் நுட்பவாதிகள் பலரையும் பயிற்றுவித்துள்ளது.

இன்று நாட்டின் ஒவ்வொரு பெரிய தொழில் பிரதேசத்திலும் 60-க்கும் அதிகமான தொழிற் கூடங்கள், அலுவலகங்கள், டிப்போக்கள், கம்பிரஸிங் நிலையங்களை நிறுவி செயல்பட்டு வருகிறது. ஒரு விரிவான விநியோகிப்புப் பணியையும் அது செய்து வருகிறது. வெல்டிங் சம்பந்தமாக எழக்கூடிய எந்த ஒரு பிரச்னையையும் தீர்த்து வைக்க இந்தியா முழுதும் ஐஓஎல் தொழில் நுட்ப நிபுணர்களும், சர்வீஸ் இன்ஜினீயர்களும் பணியாற்றுகின்றனர்.

வெல்டிங் துறையில் முதல்வர்கள் :

**IOL**

IOC - 1768 TAM






தமிழாக்கம்: ராஜாஜி

## 38

கிறிஸ்தவப் பிரசாரகர்களுக்குக் காந்தியடிகள் சொன்னது:

''நீங்கள் இந்தியாவில் பிரசாரம் செய்ய வருகிறீர்கள். கடவுளைப் பற்றி ஒன்றும் தெரியாத மக்கள் கூட்டம், கல்லையும் பொம்மையையும் பூஜை செய்யும் அஞ்ஞானிகள் என்று இந்திய மக்களைக் கருதி அவர்களுக்கு அறிவூட்ட வருகிறீர்கள். ஒரு கிறிஸ்தவ ஞானி மானிட உலகத்தைப் பற்றி எழுதியிருக்கிற பாட்டில் ஒரு வரி என்னை எப்போதும் உறுத்துகிறது. 'கடவுள் படைத்த நாடு அழகாக இருக்கிறது. ஆனால் மானிடனோ நீசனாக இருக்கிறான்.'

பிஷப் ஹேபர் இப்படி எழுதாமல் இருந்திருக்கலாம். இந்தியா முழுவதும் நான் சஞ்சாரம் செய்திருக்கிறேன். என்னுடைய அனுபவத்தில் இது உண்மையல்ல. இந்த விசால தேசத்தில் உள்ளதை உள்ளபடி காணவேண்டும் என்று எங்கும் அலைந்திருக்கிறேன். முந்தைய ஒரு முடிவை மனத்தில் வைத்துக் கொண்டு நான் போய் ஆராய்ச்சி செய்தவனல்ல. பாரத தேசத்தில் நான் கண்ட மானிடன் நீசனல்ல. கங்கை, யமுனை, பிரம்மபுத்திரா முதலிய ஆறுகளின் வெள்ளத்துக்கிடையில் வாழும் மக்கள் பொய்யர்கள், கயவர்கள் அல்ல. என்னைப் போலவும் உங்களைப் போலவுமே அவர்கள் சத்தியத்தை நாடுபவர்கள். ஏன், நம்மை விட மேம்பட்டவர்கள் என்றே கூடச் சொல்லலாம். எனக்கு ஒரு பிரெஞ்சு நண்பர் சொன்ன கதை நினைவுக்கு வருகிறது.

ஞான விளக்கம் தேடிக் கொண்டு ஒரு படை வெளியேறியதாம். அதில் ஒரு கூட்டம் இந்தியாவில் இறங்கிற்றாம். இறங்கி, சேரியில் ஒரு சிறு குடிசையில் கடவுளையும் சத்தியத்தையும் கண்டார்களாம்.

ஹரிஜனங்களுடைய பல குடிசைகளில் நீங்கள் தெய்வம் இருப்பதைக் காண்பீர்கள். உங்களுக்கு நான் உறுதியாகச் சொல்கிறேன். அவர்கள் வாதம் செய்ய மாட்டார்கள். ஆனால் அவர்களுடைய கடவுள் பக்தியை அசைக்க முடியாது. அவர்களுடைய தினசரி வாழ்க்கைக்கு அவர்கள் கடவுளையே நம்பி இருக்கிறார்கள். ஆண்டவனுடைய அருளைப் பெற்றும் வருகிறார்கள். சேரியில் வசிக்கும் ஹரிஜனங்களைப் பற்றிப் பல ஞானக் கதைகள் உண்டு. அவர்களில் பலர் அஞ்ஞானிகள் தான். கெட்டவர்களும்தான். ஆனால் அவர்களில் ஞானிகளும் உண்டு. மிகப் பெரிய ஆத்மாக்களும் உண்டு. நான் இப்படிக் கண்டது சேரிகளில் மட்டுமல்ல. பல பிராமணர்களிலும் இப்படியே கண்டிருக்கிறேன். பிராமணர்கள் அல்லாத பல ஜாதியினர்களிலும் இதைக் கண்டிருக்கிறேன். உலகத்தில் எந்தப் பகுதியில் நீங்கள் கண்டெடுத்துக் காட்டக் கூடிய பக்தியும் ஞானமும் இந்தியாவிலும் எந்த ஜாதியிலும் காணலாம்.

பிராமணர்களாகப் பிறந்தவர்கள் பலபேர் இருக்கிறார்கள். தியாகம், தெய்வ பக்தி, அடக்கம் இந்தக் குணங்களே உருக்கொண்டாற்போன்றவர்கள். உடல், ஆவி, இரண்டையும் தீண்டாதவர்களுக்காகக் கொடுத்துச் சேவை செய்பவர்கள். எந்தப் பிரதி உபகாரமும் எதிர்பார்க்காதவர்கள் இருந்து வருகிறார்கள். வைதிகர்களுடைய விரோதத்தையும் சாபங்களையும் அடைந்து சகித்து வருகிறார்கள். தீண்டாதவர்களுக்குச் சேவை செய்வது தெய்வப் பணி என்று கருதி எல்லாவற்றையும் பொறுத்துக் கொண்டு வருகிறார்கள். இதற்கெல்லாம் என் அனுபவமே சாட்சி. இந்தத் தேசத்துக்கு நன்மை செய்வதற்காக நீங்கள் வந்திருக்கிறீர்கள். ஆனபடியால் இந்தத் தேசத்தை நீங்கள் நன்றாக அறிய வேண்டும். அதனாலேதான் இதையெல்லாம் உங்களுக்குச் சொல்லுகிறேன். இந்தியாவில் வாழும் மக்களின் கஷ்டமும் குறையும் என்ன என்பதை விசாரித்து அவற்றை நீக்க நீங்கள் வந்திருக்கிறீர்கள். இந்தியாவிலிருந்து நீங்களும் ஓரளவு நன்மையும் அறிவும் பெறலாம். வேண்டாம் என்று காதையும் கண்ணையும் மூடிக் கொள்ளாதீர்கள். இந்த நாட்டில் நீங்கள் பெறக் கூடிய நல்ல விஷயம் ஏதுமே இல்லை என்று நெஞ்சைக் கல்லாக்கிக் கொள்ளாதீர்கள். தெய்வபக்தி இந்த நாட்டில் ஊர்ஜிதமாக இருக்கிறது. உங்களுக்கு நான் உறுதியாகச் சொல்கிறேன். பைபிள் புஸ்தகத்திலிருந்து மந்திரம் எடுத்து உச்சரித்தால் மனிதன் கிறிஸ்தவனாகி விடுகிறான் என்று எண்ணாதீர்கள். ஏசு கிறிஸ்துவின் பெயரையே அறியாதவர்கள் பலர் இருக்கிறார்கள், கிறிஸ்தவ மதத்தை உங்களுடைய வியாக்கியானத்தின்படி ஒப்புக் கொள்ளாதவர்கள் பலர் இருக்கிறார்கள். இன்று ஏசுநாதரே திடீர் என்று நம்மிடையில் வந்து தோன்றினால் இவர்களை அவர் ஒப்புக் கொள்வார். உங்களையும் என்னையும் ஒப்புக் கொள்ளாமலும் இருப்பார். மனத்தை விசாலப்படுத்திக் கொண்டு அடக்கத்துடன் உங்கள் கடமை இன்னதென்று யோசித்துச் செய்யுங்கள்.

டார்ஜிலிங்கில் ஒரு மிஷன் பள்ளிக்கூடத்தில் ஒரு நிகழ்ச்சியைச் சொன்னேன். அது

இப்போது என் நினைவுக்கு வருகிறது. சில கிறிஸ்தவ மதப் பிரசாரகர்கள் ஸாலிஸ்பரி பிரபுவிடம் சென்றார்கள். ''நாங்கள் சீன தேசத்தில் வேலை செய்ய வேண்டும். எங்களுக்குக் காப்பு வேண்டும்'' என்று கேட்டார்கள். அதற்கு ஸாலிஸ்பரி பிரபு பதில் சொன்னார்: ''கனவான்களே! நீங்கள் சீனவுக்குச் சென்று ஏசுநாதருடைய உபதேசத்தைப் பிரசாரம் செய்ய விரும்பினீர்களானால் நீங்கள் அரசாங்கத்தின் உதவியைத் தேடாதீர்கள். ஆபத்துக்களுக்குத் தயாராக நீங்கள் செல்ல வேண்டும். உங்கள் உயிரையும் இழந்து விடத் தயாராக இருக்க வேண்டும். சீன தேசத்தார் உங்களைக் கொன்று விட்டால் ஆண்டவன் பணியில் உயிரை இழந்ததாக நீங்கள் எண்ண வேண்டும்.'' இவ்வாறு அவர் சொன்னதாக எனக்கு ஞாபகம். இந்தியாவில் வேலை செய்யும் கிறிஸ்தவப் பாதிரிமார் சர்க்காருடைய உதவியோடு வேலை செய்கிறார்கள். அந்த உதவி உதவியல்ல. தடையேயாகும். பிரசாரம் பயனடையாமல் செய்கிறது. பெற்றோரை இழந்த அநேக குழந்தைகளைக் கிறிஸ்தவப் பாதிரிமார்கள் எடுத்துக் காப்பாற்றி வளர்த்திருக்கிறார்கள். இந்தச் சேவையைப் பற்றிச் சந்தேகம் இல்லை. நானும் அந்த விஷயத்தை மறுக்கவில்லை. ஆனால் பாதிரிமார்களுடைய கடமை இதுவா என்பது என்னுடைய சந்தேகம். திக்கற்ற குழந்தைகளை வளர்ப்பதை விட உங்களுக்குப் பெரும் கடமை இருந்து வருகிறது. பாதிரிமார்களுக்கு நான் நண்பன். விரோதியல்ல. வெள்ளைக்காரர்களுக்கும் நான் உண்மையான நண்பன். அந்த உரிமையைப் பாராட்டி என் உள்ளத்தில் கண்டதை உங்களுக்குச் சொல்லுகிறேன். இந்திய மக்களுடன் நீங்கள் ஒன்றுபட்டுச் சேரவில்லை. அதற்கு உங்கள் மனம் இசையவில்லை. அதற்கு வேண்டிய அடக்கத்தை உங்களிடம் நான் காணவில்லை. அவர்களிடமுள்ள நற்குணங்களைக் கண்டு அதன் பயனை நீங்களும் அடைய வேண்டும். அதை நான் காணவில்லை. மறைக்காமல், ஒளிக்காமல் பேசினேன். உங்கள் உள்ளத்தில் என்னுடைய கருத்துக்கள் இடம் பெறுவதாக.

(யங் இந்தியா 6-8-25)

# வட்டமேஜை

★ ரூ. 15 பரிசு பெறும் கடிதம்

**கல்கி** 5–7–70 இதழில் வெளியாகியிருக்கும் 'காமராசரின் அறைகூவல்' என்னும் தலையங்கம் என்னைப் பெரிதும் கவர்ந்தது. அது சாதாரணத் தலையங்கம் அல்ல. பாரத நாட்டின் சமீப கால அவல நிலையைத் தவிர்ப்பதற்கு ஏற்ற தாரக மந்திரமெனச் சொல்ல வேண்டும்.

நம் ஒப்பற்ற தலைவர் தீர்க்கதரிசி ராஜாஜி ஒருவரால்தான் இப்படித் தைரியமாக எழுத முடியும். அது சத்தியத்தின் குரல்; நாட்டைப் பற்றிய கவலையே இல்லாமல், பதவி மோகம் பிடித்து அலையும் சில தலைவர்கள் நம் பிரதம மந்திரி இந்திராகாந்தி சொல்வதற்கெல்லாம் தலையை ஆட்டிக் கொண்டிருக்கும் வரையில் அவரது ஆதிக்க வெறி தணிவதற்குச் சந்தர்ப்பமே இல்லை.

பாரதப் போர் மும்முரமாக நடந்து கொண்டிருந்த பொழுது கீதாசாரியனான கண்ணபிரான் சங்கநாதம் செய்து அசத்தியத்தையும், அக்கிரமங்களையும் அழித்து, ஒழித்தது போல் நம் தலைவர் ராஜாஜி அறம் தழைக்க, மறம் மடியத் தனிக் குரல் கொடுக்கிறார். கண்ணன் காட்டிய வழியில் சென்ற பாண்டவர்களைப் போல் நாமும் நம் தலைவரைப் பின்பற்றுவோம்.

நம் பீஷ்ம பிதாமகர், தர்மத்தின் தனி வடிவம், தியாக சிகரம், தீர்க்கதரிசி, தீனபந்து ராஜாஜி அவர்கள், பிராயம் முதிர்ந்த இந்தத் தள்ளாத வயதில் கம்யூனிஸப் பிடியில் சிக்க இருக்கும் பாரத நாட்டைப் பாதுகாக்க மேற்படி தலையங்கத்தின் மூலம் நாட்டு மக்களுக்கு ஒளியைக் காட்டியிருக்கிறார். அந்த ஒளியைப் பின்பற்றி நலம் அடைவது நாட்டு மக்களின் கடமை.

சென்னை–7
2–7–70 கி. மோகன் பி.ஏ.

★ **பா**டப் புத்தகங்களில் கட்சிப் பிரசாரம் செய்யப்படுகிறது என்று கண்டனம் எழுப்பப் படுகிறது. ராஜாஜி அவர்கள் சென்னை ராஜ்ய முதலமைச்சராக இருந்த பொழுது சொல்லியதை நினைவுக்குக் கொண்டு வர ஆசைப்படுகிறேன். அவர் பாடப் புத்தகங்களைத் தேசியமயமாக்குவதை ஒப்புக் கொள்ளவில்லை. ''ஜனநாயகத்தில் ஒரு கட்சி தேர்தலில் தோற்று மாற்றுக் கட்சி பதவிக்கு வருவது எதிர்பார்க்கக் கூடியதே. பதவிக்கு வரும் கட்சி தம் கொள்கைகளைப் பாடப் புத்தகங்களில் புகுத்துவதும் இயல்பாக நடக்கக்கூடியது. கேரளாவில் தேசியமயமாக்கப்பட்ட பாடப்புத்தகங்களே இதற்கு உதாரணமாகும். ஆதலால் ஒரு பாடத் திட்டத்தின்படி எழுதப்பட்ட தனியார் துறை புத்தகங்களைப் பாட புத்தக கமிட்டியார் அங்கீகரித்தபின் ஆசிரியர்கள் தங்களுடைய விருப்பத்துக்கேற்ப அங்கீகரிக்கப்பட்ட புத்தகங்களிலிருந்து தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம். போட்டியிருக்குமாதலால் புத்தகங்கள் நல்ல முறையிலும், மலிவாகவும் கிடைக்கக் கூடும்'' என்று சொன்னார். அச்சமயம் கல்வி அமைச்சராயிருந்த திரு சுப்பிரமணியம் தேசிய மயமாக்கத் துணிவு கொள்ளவில்லை. ராஜாஜி அவர்கள் விலகியபின் தேசிய மயமாக்கும் கொள்கையை ஆரம்பித்தார். அன்று அவர் ஆரம்பித்தது இன்று தமிழக அரசால், பின்பற்றப்பட்டு விஸ்தரிக்கப்படுகிறது. தாங்களே சாசுவதமாக ஆளப் போகிறோம் என்று நினைத்து வந்த காங்கிரசார் இன்று தாம் செய்த காரியத்தின் பயனை அநுபவிக்கிறார்கள்.

துளசேந்திரபுரம்
9–7–70 ஆர். எஸ்.



# முன்னேற்றப்

பிஹாரைச் சேர்ந்த குமார் பரித்பூரில் 18-9-1908ம் ஆண்டு பிறந்த ஹரிமோஹன் ஜா பாட்னா சர்வகலாசாலையின் எம். ஏ. பட்டதாரி. பாட்னா சர்வ கலாசாலையில் தத்துவப் பேராசிரியர். பன்னிரண்டுக்கு மேற்பட்ட நூல்களை எழுதிய இவரது மைதிலி நாவல்கள் சில திரைப்பட வடிவம் பெற்றுள்ளன. ஹாஸ்ய மாகவும், 'ஸடைய'ராகவும் எழுதுவதில் விற்பன்னர். ●

ரயில் வண்டி வேகமாகப் போய்க் கொண்டிருந்தது. முதல் வகுப்புப் பெட்டியின் மூன்று மெத்தைகளில் மூன்று ஜோடி தம்பதிகள் அமர்ந்திருந்தனர். ஒரு முக்கோணத்தின் மூன்று புள்ளிகள் நெருங்கி வந்தாற் போல. ஆம், வங்காளம், காஷ்மீரம், கேரளம் ஆகிய ராஜ்யங்களைச் சேர்ந்தவர்கள் அவர்கள்.

அப்பொழுது இரவு மணி பத்தரை அடித்துக் கொண்டிருந்தது. மூன்று கணவன்மார்களும் படிப்பதில் ஈடுபட்டிருந்தார்கள். அவர்களுடைய மனைவிமார்களோ டிபன் காரியர்களைத் திறந்து உணவு எடுத்து வைப்பதில் முனைந்திருந்தார்கள்.

வங்காளத்தவர், ஆனந்தபஜார் பத்திரிகையைத் தமக்குத் திரையாக்கிக் கொண்டு பார்வையை ஓட்டினார். துருதுருவென்று ஒல்லியான தேகம் படைத்த கேரளத்து அழகி அவர் பார்வையில் பட்டாள். கறுப்பென்றாலும் குறிப்பானவள் அவள். ஏறக்குறைய 18—19 வயது இருக்கலாம் அவளுக்கு. வாரிப் பின்னிய கூந்தலில் நறுமலர்களைக் கிரீடமெனத் தொடுத்துச் சூடியிருந்தாள். பார்ப்பதற்கு ஓர் அரசிளங்குமரியெனத் தோற்றினாள். அவள் அணிந்திருந்த பொடி நிறப் புடவையும், கத்திரிப்பூ நிற ரவிக்கையும், நீலத் தாமரைக்கு அறைகூவல் விடுவதுபோல் இருந்தன. அவள் இட்டிலி, தோசை, சாம்பார், ரசம் ஆகிய ஏனைய உணவுப் பொருள்களைத் தட்டுக்களில் எடுத்து வைத்துக் கொண்டிருந்தாள்.

அதைக் கண்ணுற்ற வங்காளத்தவரின் நாக்கில் நீர் ஊறிற்று. அவர் ஆவல் தவழும் விழிகளுடன், உணவுப் பண்டங்களையும் அவற்றைப் பரிமாறுபவளையும் மாறி மாறிப் பார்க்கலானார். அவரால் தம் ஆவலை அடக்க முடியவில்லை. எனவே, 'தென்னிந்திய உணவு என்றால் அதன் ருசியே தனிதான்!' என்று நற்சான்று வழங்க முற்பட்டு விட்டார்.

கேரளப் பெண் சட்டென்று துணுக்குற்றுத் தன் புடவைத் தலைப்பைச் சரிசெய்து கொண்டாள். அந்த நேரத்தில் கேரள இளைஞன் 'பிலிம் பேர்'ரைத் தனக்குத் திரையாகப் பயன்படுத்திக் கொண்டு, காஷ்மீரப் பெண்ணின் சதைப் பற்று நிறைந்த உடலழகை ரசித்துக் கொண்டிருந்தான். அவள் தட்டுக்களில் பொன்னிறமான உருளைக் கிழங்கு, பருப்பு, இறைச்சிக் குழம்பு, வெந்த பட்டாணி, அத்திக்காய் எண்ணெய்க் கறி ஆகியவற்றை எடுத்து வைத்துக் கொண்டிருந்தாள். அவளுக்கு நல்ல வாளிப்பான மதர்த்த உடல். பேரிளம் பெண்ணாகத் தோன்றினாள்.

ஒரு கணக்கில் அகப்படாத வயது. இருபத்தாறிலிருந்து முப்பத்தாறுக்குள் இருக்கும். பட்டுச் சல்வார் மீது திராட்சை நிறச் சட்டையும் வெங்காய வண்ணத் துப்பட்டாவும் அவளது ரோஜா வண்ணச் செந்தளிர் மேனிக்கு மெருகூட்டிக்கொண்டிருந்தன. உதடுகளும்தான் எப்படிச் சிவந்திருந்தன ; காஷ்மீரத்துச் சென்னிற ஆப்பிள் தோற்றுப் போகும்படி! கேரள வாலிபன் வாய் பேசாமல் அவளது வாளிப்பான இளமையைப் பார்வையால்



மைதிலி

# பாதையில்...

ஹரிமோஹன் ஜா

பருகிக் கொண்டிருந்தான், அடக்க ஒடுக்கம் என்பதை அறவே அறியாதவன்போல்.

வங்காளத்தவரின் பேச்சைக் கேட்டுக் கேரளத்து வாலிபனின் கவனம் சட்டென்று கலைந்தது. கையும் களவுமாகப் பிடிக்கப்பட்ட திருடன் போல் துணுக்குற்று, ''நீங்கள் தெற்கத்திய உணவை விரும்புகிறீர்கள். நானோ காஷ்மீரத்து உணவைக் காதலிக்கிறேன்!'' என்றான் குறும்பாக.

இந்தப் புகழ்மொழியைக் கேட்டதும் காஷ்மீரத்துப் பெண்ணின் ஆப்பிள் கன்னங்களில் ரோஜாவின் செம்மை கூடியது. அவள் பெருமையோடு புன்னகை செய்தாள். அவளுடைய கருவண்டுக் கண்களில் குறும்பு தாண்டவமாடியது.

காஷ்மீரத்தவருக்குத் தமது பேச்சைத் தொடங்க இப்பொழுது ஒரு தருணம் கிடைத்தது. ''உங்களுக்குக் காஷ்மீரத்து உணவு பிடிக்குமா ? எனக்கு வங்காளத்து உணவு வகைதான் ஈர்க்கிறது!'' என்றார்.

காரணமின்றி அவர் அப்படிச் சொல்லிவிடவில்லை. ஏனென்றால், வங்கப் பெண் அப்பொழுது தட்டுகளில், கறி, கூட்டு, மீன் வறுவல் ஆகியவற்றைப் பரிமாறிக் கொண்டிருந்தாள். அதன் வாசனை பெட்டி முழுவதையும் ஆக்கிரமித்துக் கொண்டிருந்தது. சொல்லப் போனால், அவள் கவர்ச்சியும் இலேசுப்பட்டதல்ல. குத்துவிளக்கின் சுடரைப் போல் பிரகாசித்துக் கொண்டிருந்த அவள், வெள்ளைத் தாமரைப் பூவில் இருக்கும் கலைவாணியை நினைவுபடுத்திக் கொண்டிருந்தாள். வெண்பனி போன்ற துல்லியமான நைலான் அவளுடைய எழிலுக்கு எழில் சேர்த்துக் கொண்டிருந்தது. சம்பக மலரை நிகர்த்த அவளுடைய தேக காந்தி, 'கினி கோல்டை' நாணச் செய்து கொண்டிருந்தது. நெற்றியில் பளிச்சிடும் குங்குமப் பொட்டின் வட்டம் அவளது மாசற்ற அழகுக்கு முத்திரையிட்டாற் போலத் தோன்றியது. காஷ்மீரத்தவரின் துதிப் பாடலைக் கேட்டு, அவள் உதடு



களுக்குள்ளேயே விஷமமாக நகைத்துக் கொண்டாள். பிறகு தன் கணவனை ஓரக் கண்களால் ஒரு வெட்டு வெட்டினாள்.

வங்காளத்தவர் அவளது பார்வையின் பேச்சைப் புரிந்து கொண்டு ஒரு பிரேரணையைப் புகுத்தினார்: ''அப்படியானால் வாருங்கள்! இன்று உங்களுக்கு வங்காளத்துச் சாப்பாடா யிருக்கட்டும்!''

அதைத் தொடர்ந்து கேரளத்து இளைஞன் வங்காளத்தவருக்கு வேண்டுகோள் விடுத்தான். ''அப்படியானால் நீங்களும் வாருங்கள்! உங்களுக்குத்தான் தென்னிந்திய உணவென்றால் பிடிக்குமே!'' என்றான்.

காஷ்மீரத்தவரும் தமக்குக் கிடைக்கும் வாய்ப்பைத் தவற விடவில்லை. அவர் கேரளத்து இளைஞனிடம், ''அப்படியானால், நீங்கள் என் இடத்தை எடுத்துக் கொள்ளுங்கள். அப்பொழுதுதான் கணக்குச் சரியாகும்!'' என்றார்.

ஒரு நொடியில் காட்சி மாறிவிட்டது. குவளை மலரின் நிறத்தை நாண வைக்கும் கேரளப் பெண், பக்கத்தில் உட்கார்ந்திருந்த வங்காளத்தவருக்குத் தோசை பரிமாறிக் கொண்டிருந்தாள். வெண்ணெயின் மென்மைக்கு மென்மை சேர்க்கும் வங்காளத்து மெல்லியலாள், மிருதுவான கடலைக் 'கசோடி'கள் நிறைந்த தட்டைக் காஷ்மீரத்துக்காரரிடம் நீட்டிக் கொண்டிருந்தாள். மூன்றாவது மெத்தையில், நிறை இளமை கொண்ட காஷ்மீரத்து அழகி கேரள இளைஞனுக்குத் 'தந்தூரி' ரொட்டி தந்து கொண்டிருந்தாள்.

மூவரும் உணவின் ருசியைச் சுவைத்துக் கொண்டே சம்பாஷணையைத் தொடர்ந்தனர். தேங்காய்ச் சட்டினியைச் சுவைத்த வங்காளிக்காரர், 'இது போல் அவ்வப்பொழுது சுவை மாற்றம் தேவைதான்!'' என்றார்.

காஷ்மீரத்துக்காரர் வங்காளப் பொரியலை ருசித்தவண்ணம் ஆமோதித்தார்: ''இதில் சந்தேகம் என்ன? தினம் தினம் ரொட்டியும் பருப்பும்தான் என்றால் வாழ்க்கையிலே சுவை ஏது?''

கேரள இளைஞன் காபுல் கடலையைக் கடித்து மகிழ்ந்தவனாக, ''வாழ்க்கையே மாறும் தன்மை வாய்ந்தது. தினசரி நடைமுறையிலும் அவ்வப்போது ஏதாவது மாறுதல் இருக்க வேண்டியதுதான்!'' என்றான்.

''இது 'கல்சுரல் இன்டர் மிக்ஸ்சர் பீரியட்.' அதாவது கலாசாரக் கலவைக் காலம். அதனால் எல்லாரும் நெருங்கி உறவு கொள்ள வேண்டும்!'' என்றார் வங்காளத்துக்காரர்.

''மெய்தான். நாம் நமது நடை, உடை, பாவனை, உணவு, மொழி முதலிய குறுகிய மனப்பான்மைகளைத் தகர்த்துக் கொண்டு ஒன்றினால்தானே அது இயலும்?'' என்றார் காஷ்மீரத்துக்காரர்.

''அனைத்துலகத் திருமணங்கள் மூலம்தான் இப்பிரச்னையைத் தீர்க்க முடியும். 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்னும் கோஷம் மிகவும் பழையதாகி விட்டது. அதை 'அத்திம்பேர் — மைத்துனன்' உறவாக மாற்றியமைக்க வேண்டும்.'' ஒரு படி மேலே போனான் கேரளத்து இளைஞன்.

காஷ்மீரத்துக்காரர் அட்டகாசமாகச் சிரித்துத் தொடர்ந்தார்: ''நன்றாகச் சொன்னீர்கள்! முதல்தர யோசனை. ருஷ்யாவுக்கும் அமெரிக்காவுக்கும் இடையே பெண் கொடுத்துப் பெண் எடுக்கும் உறவு உருவாகி விட்டால், அப்புறம் போருக்கும் பூசலுக்கும் இடம் ஏது? என்னைக் கேட்டால் எல்லா நாட்டுப் பெண்களும் தங்களை ஒருவருக்கொருவர் சகோதரிகளாகப் பாவிக்க வேண்டும். அப்படி அவர்கள் உறவு கொண்டு விட்டால், சீனாக்காரன், ஜப்பான்காரன், இந்தியன், பாகிஸ்தானியன் — எல்லோரும் 'சகலை'களாகி ஆனந்தமாக வாழலாம்; ஹோலிப் பண்டிகைகூடக் கொண்டாடி மகிழலாம்!''

பெண்களும் ஒருவரை யொருவர் கடைக் கண்களால் பார்த்துக் கொண்டார்கள். அவர்கள் முகத்திலும் புன்னகை பொன்னகையாக மலர்ந்தது.

வங்காளிக்காரருக்கு உற்சாகம் பொங்கிக் கொண்டு வந்தது. ''பெண்கள் யாரும் சாப்பிடக் காணுமே! அவர்களும் சாப்பிடலாமே!'' என்று ஊக்கினார்.

மூவரும் நாகரிக மங்கைகள்தாம். இருந்தாலும் வேற்றுப் புருஷர்களுடன் சேர்ந்து எப்படிச் சாப்பிடுவது என்று தயங்கினார்கள். ஆனால் கண் ஜாடையால் கணவன்மார்கள் அநுமதி கொடுக்கவே, அவர்கள் நாணம் நீங்கியது.

இன்னும் சுவையான காட்சி அப்பொழுதுதான் உருவாகியது. வங்காளிக்காரரும் கேரள மங்கையும் சேர்ந்தாற்போல் ரசம் பருகிக் கொண்டிருந்தார்கள். கேரள இளைஞனும் காஷ்மீரத்து அழகியும் ஒருங்கே 'ரோகன் ஜோஷ்' அருந்திக் கொண்டிருந்தார்கள். காஷ்மீரத்துக்காரரும் வங்காளத்து வனிதையும் மீன் வறுவலைச் சுவைத்துக் கொண்டிருந்தார்கள்.

அதற்கேற்பப் பேச்சிலும் ஒரு முன்னேற்றம் கண்டது. பொறுமை, பரந்த நோக்கு, விட்டுக் கொடுக்கும் மனப்பான்மை பற்றிப் பேச்சு வளர்ந்தது. எல்லோரும் ஒருமுகமாக இக்கருத்தை ஆதரித்தனர். பரந்த உள்ளம் படைத்த இந்தப் பிரயாணத் தோழர்கள் உலகத்து வேற்றுமைகளனைத்தையும் ஒழித்துக் கழித்து அன்றிரவு பூரண ஒற்றுமையை நிலைநாட்டி விட்டே மூச்சு விடுவார்கள் என்று தோன்றியது.

கேரள இளைஞன் கூறினான்: ''பழங்காலத்துக் குறுகிய தீய பண்புகளையெல்லாம் நாம் ஒதுக்கிவிட வேண்டும். பத்தாம் பசலி அறநெறிகள் அனைத்தையும் குழிதோண்டிப் புதைக்க வேண்டும்!''

வங்காளத்தவர் அதை ஆமோதித்தார்: ''கற்பை எடுத்துக் கொள்ளுங்கள். இது மத்திய கால நெறிமுறை. இருபதாம் நூற்றாண்டுக்கு இது ஒவ்வாது!''

காஷ்மீரத்தவருக்குக் குஷி பிறந்தது. ''நீங்கள் கூறுவது நூற்றுக்கு நூறு உண்மை. இந்தக் குருட்டு நம்பிக்கைகளும் எண்ணங்களும் தாழ்ந்தோர்களிடமும் கிடையாது; உயர்ந்தோர்களிடமும் கிடையாது. நடுவாந்

---

அட்டைப்பட ஓவியத்தைத் தீட்டக் கலைஞர் கல்பனாவுக்கு இக் கதையே ஆதாரமாக அ...

தர ஆசாமிகள்தாம் இவற்றைச் சுமந்து கொண்டு திரிகிறார்கள். அதுவும் வெறும் வெளிப் பகட்டுக்காக. என்னைக் கேட்டால், இதெல்லாம் வெறும் ஏமாற்று வித்தை, சுத்த மோசடி என்பேன்'' என்றார்.

கேரள இளைஞன் சிகரெட்டைப் பற்ற வைத்துக் கொண்டு ''விஞ்ஞானம் வளர்ந்த இந்த ஸ்புட்னிக் யுகத்தில் இன உறவு திருமணம் என்னும் குறுகிய வட்டத்தில் வளைய வந்து கொண்டிருக்க முடியாது. கணவனின் ஏகபோக உரிமை இனி உடைந்தே தீரும்!'' என்றான்.



மேலே காணப்படும் புகைப்படம் எதனுடையது? ஸ்டார் ஃபிஷ் என்று பெயர் கொண்ட நட்சத்திர வடிவில் கடல்வாழ் பிராணியா? கொடிய ஆக்டோபஸின் குட்டியா? புது வகையான பூவா? அல்லது வேறு ஏதேனுமா?

(விடை: 24ம் பக்கம்)

போகவேண்டிய இடத்தை நோக்கிப் போய்க் கொண்டிருந்தார்கள். பெட்டியில் இருந்த மூன்று காதல் ஜோடிகளும் இருப்புப் பாதையைப் போலவே சம இடைவெளி விட்ட கோட்டில் சென்று கொண்டிருந்தார்கள். இமை கொட்டும் நேரத்துக்கு மட்டும் அவர்கள் தங்கள் நேரிய பாதையிலிருந்து பிறழ்பவர்களைப் போல் தோன்றினார்களே ஒழிய...

பொங்கி வரும் வெள்ளப் பெருக்கில் மூன்று நீரோட்டங்கள், கரை தரைகளை உடைத்துக் கொண்டு ஒன்று கூடி, வெள்ளத்தின் வேகம் தணிந்ததும் தங்கள் எல்லைக்குள் அடங்கி ஓடுமே, அப்படி இருந்தது அந்த நிகழ்ச்சி!

''ஐயா! இந்த விஷயங்கள் இப்பொழுது தானாகவே ஒழிந்து கொண்டிருக்கின்றன. இன்னும் மிச்சம் மீதியிருக்கிற அசட்டுத்தனங்களைக் காலம் கரைத்துவிடும்!'' என்றார் காஷ்மீரத்தவர்.

வங்காளத்துக்காரர் கேரள சுந்தரியின் கையிலிருந்து வெற்றிலை பீடாவை வாங்கிக் கொண்டு, ''ஒழுக்கப் புரட்சி செய்தே ஆக வேண்டும். நாம் படித்தவர்கள் தலைமை ஏற்று வழிகாட்டாவிட்டால் வேறு யார் முன் வருவார்கள்?'' என்றார்.

காஷ்மீரத்தவர் கர்வத்தோடு, ''ஒரு கொள்கையை உபதேசிப்பது எளிது. ஆனால் அதைச் செயலில் கொண்டு வருவதுதான் கடினம். சொல்லையும் செயலையும் ஒன்றாக்கிக் காட்ட வேண்டும். என்னைப் பொறுத்தவரை ஆதரிசத்துக்கும் நடப்புக்கும் வேறுபாடே கிடையாது'' என்றார்.

''நானும் சொல்வதைச் செயலாக்கிக் காட்டுபவன்தான்'' என்றான் கேரள இளைஞன்.

வங்காளிக்காரர் ''நானும் முன்னேற்ற விஷயங்களில் யாருக்கும் பின்தங்குபவன் அல்ல. கொள்கையை அப்படியே வாழ்க்கையில் கடைப்பிடிப்பவனுக்கும்!'' என்றார்.

மூவரும் ஒருவரை யொருவர் பார்த்தனர். திடீரென்று மின்னலென ஓர் ஒளி பளிச்சிட்டது. பார்வையிலேயே ஏதோ ஓர் ஊமை உடன்படிக்கையும் நடந்து விட்டது.

அந்நேரம் பார்த்து ரயில் பெட்டியின் விளக்கு பட்டென்று அணைந்து விட்டது. கனந்தகார இருளில் எல்லாமே சிரடைந்து விட்டன. யாரும் தங்கள் ஆசனத்திலிருந்து அங்கு இங்கு இம்மியும் அசையவில்லை. வாய் விரியப் பேசிக் கொண்டிருந்தவர்களின் வாயிலிருந்து ஒரு சொல் கூட எழவில்லை.

வண்டி வேகமாகப் போய்க் கொண்டிருந்தது. எத்தனையோ ஆறுகளையும் வாய்க்கால்களையும் தாண்டிக் கொண்டு. வெளியே பேரிரைச்சல் புரிந்து ஓலமிடும் பயங்கரக் காற்று. ஆனால் உள்ளே, சிதோஷ்ணச் சமநிலைப் பெட்டியிலோ பூரண அமைதி.

வண்டி தன் கவட்டில்சென்று கொண்டிருந்தது. எண்ணற்ற பயணிகள் தாங்கள் உஷாதேவியின் பொன்னிறக் கிரணங்கள் புத்தொளி கூட்டும் நேரத்தில் எல்லோரும் தங்கள் தங்களுக்குரிய இடத்தில் உட்கார்ந்திருப்பதைக் கண்டார்கள். மூன்று பெண்மணிகளும் அன்றலர்ந்த மலர்களென மகிழ்வோடு தோற்றம் அளித்தார்கள். விடியற்காலைப் பனித் திவிலைகளைப் போன்ற நிர்மலமான சிரிப்பு அவர்களுடைய இதழ்க் கடைகளில் தவழ்ந்தது. அவர்கள் ஜன்னல் கதவுகளைத் திறந்து விட்டுக் கொண்டு விடுபட்ட பறவைகளெனக் கலகலவென்று தங்கள் கணவன்மார்களுடன் மாக மறுவற்ற உணர்வோடு, உரையாடிக் கொண்டிருந்தார்கள். முதல் நாள் இரவு எதுவுமே நடைபெறவில்லை என்பது போல! ஆம், என்ன நடந்து விட்டது? ஏதாவது தவறாக நடந்திருந்தால்தானே? ஏதோ ஒரு காற்று வந்தது; வந்த வண்ணமே போயிற்று. ஒரு சிறு அலை எழும்பிக் கடலிலேயே கலந்தாற்போலிருந்தது. அதனால் உலகத்தில் யாருக்காவது நிமை சம்பவித்திருக்குமா என்று கேட்டால், அதற்கான அறிகுறி எதுவுமே தென்படவில்லை. அப்படி ஏதாவது நடந்திருந்தால், உலகத்தை ஆட்டிப் படைக்கிறவருக்கு மட்டும் ஒரு வேளை தெரிந்திருக்கலாம்.

மூன்று கணவன்மார்களும் அவர்களது மனைவிமார்களும் குளித்துத் தங்கள் தங்கள் தர்மாஸ் பிளாஸ்கிலிருந்து சுடச் சுடத் தேநீர் எடுத்துப் பருகினார்கள். இத்தடவை முன்போன்ற பரிவர்த்தனைக்குத் தேவை ஏற்படவில்லை. ஏன்? அவ்வெண்ணமே அவர்களுக்கு எழவில்லை.

அடுத்த ஜங்ஷனில் மூன்று தம்பதிகளும் இறங்கி விட்டார்கள். நன்றி உறவோடு ஒருவருக்கொருவர் 'பை, பை' கூறிக் கொண்டு தங்கள் தங்கள் வழியே நடந்தார்கள்.

அப்புறம்...? பஞ்சாப் மெயில் புறப்பட்டது. புறப்பட்டுப் போய்ச் சேர வேண்டிய இடத்தை நோக்கி முன்னேறியது. முன்னேறியது; அப்படி முன்னேறியது!

**[ஹிந்தியிலிருந்து தமிழாக்கம்: ரா. வீ.]**



# பொன்னியின் செல்வன்

அமரர் கல்கி

## பத்தாம் அத்தியாயம்

## மனித வேட்டை

**வ**ந்தியத் தேவன் நாயின் வாயில் அகப்படாமல் தரையில் குதிக்கப் பார்ப்பதா, அல்லது மறுபடியும் மதில்சுவரின் மேல் ஏறுவதா என்று தீவிரமாகச் சிந்தித்துக் கொண்டிருந்தான். அதே சமயத்தில் பக்கத்திலிருந்த மரங்களின் மறைவில் யாராவது ஒளிந்திருக்கிறார்களா என்றும் கூர்மையாகக் கவனித்தான். ஒரு மரத்தின் மறைவில் வெள்ளைத்துணி தெரிவதுபோலிருந்தது. சற்று முன் நாயின் குரைப்புச் சத்தத்தோடு மனிதனின் சிரிப்புக் குரல் கலந்து கேட்டது நினைவுக்கு வந்தது. மனிதர் யாராவது உண்மையில் மறைந்திருந்தால்? ஒரு மனிதனோ? பல மனிதர்களோ? அதைத் தெரிந்து கொள்ளாமல் குதிப்பது பெருந் தவறாக முடியும்! நாயின் வாயிலிருந்து தப்பினாலும் மனிதர்களின் கையில் அகப்படும்படி நேரிடலாம். அரண்மனை மேல் மாடத்திலிருந்து பார்க்கும் போது ஆழ்வார்க்கடியானுடைய முகம் மதில் சுவர் மேல் தெரிவது போலத் தோன்றியது. அந்த வைஷ்ணவன்தான் அய்யனார் கோயிலில் காத்துக் காத்துப் பார்த்து அலுத்துப் போய் இங்கு வந்து நாயை ஏவிவிட்டு வேடிக்கை செய்கிறானா, என்ன? எல்லாவற்றுக்கும் கூப்பிட்டுப் பார்த்தால் போகிறது. ''வைஷ்ணவரே! வைஷ்ணவரே! இது என்ன வேடிக்கை?'' என்றான். மறுபடியும் ஒரு சிரிப்புச் சத்தம் கேட்டது. அது ஆழ்வார்க்கடியான் குரல் அல்ல. ஆகையால் திரும்ப மதில் மேல் ஏறி அரண்மனைக்குள் இறங்குவது தான் சரி. பெரிய பழுவேட்டரையரின் வரவேற்புத் தடபுடல்களில் எப்படியாவது தப்பித்துக் கொள்ளலாம். அல்லது சுரங்க வழி இருக்கவே இருக்கிறது. மணிமேகலையிடம் மீண்டும் கொஞ்சம் கெஞ்சுமணியம் செய்தாற் போகிறது. இல்லாவிடில் பழுவூர் இளையராணியின் தயவையே சம்பாதித்துக் கொள்ள வேண்டியதுதான்! இது வரை தன்னைக் காட்டிக் கொடுக்காதவள் இப்போது மட்டும் காட்டிக் கொடுத்து விடுவாளா?...

வந்தியத்தேவன் இறங்கிய வழியில் மறுபடியும் மேலே ஏறத் தொடங்கினான்.

நாய் இன்னும் உயரமாக எழும்பிக் குதித்துக் குரைத்தது.

மீண்டும் சிரிப்புச் சத்தம் கேட்டது.

மரத்தின் மறைவிலிருந்து ஓர் உருவம் வெளியே வந்தது. அதன் கையில் ஒரு வேல் இருந்தது.

அவன் தேவராளன் என்பதை வந்தியத்தேவன் தெரிந்து கொண்டான்.

தேவராளன் வந்தியத்தேவன் சுவரில் தொங்கிய இடத்துக்கு அருகில் வந்தான்.

''அப்பனே! உன் உயிர் வெகு கெட்டி!'' என்றான்.

'' அதுதான் தெரிந்திருக்கிறதே! ஏன் மறுபடியும் என்னிடம் வருகிறாய்?'' என்று வந்தியத்தேவன் கேட்டான்.

''இந்தத் தடவை நீ! தப்ப முடியாது !'' என்று கூறித் தேவராளன் தன் கையிலிருந்த வேலை வந்தியத்தேவனை நோக்கிக் குறி பார்த்தான்.

வந்தியத் தேவன் தன்னுடைய ஆபத்தான நிலையை உணர்ந்து கொண்டான். பாதிச் சுவரில் தொங்கிக் கொண்டிருப்பவன் கீழேயிருந்து வேலினால்



குத்தப் பார்ப்பவனுடன் எப்படிச் சண்டையிட முடியும்? குதித்துத் தப்பப் பார்க்கலாம் என்றால், வேட்டை நாய் ஒன்று மேலே பாயக் காத்துக் கொண்டிருக்கிறது.

''தேவராளா! ஜாக்கிரதை! உங்கள் எஜமானி பழுவூர் ராணியின் கட்டளையை ஞாபகப்படுத்திக் கொள்! என்னை ஒன்றும் செய்ய வேண்டாம் என்று உங்களுக்கு ராணி சொல்லியிருக்கவில்லையா?''

தேவராளன் ஒரு பேய்ச் சிரிப்பு சிரித்து விட்டு, ''பழுவூர் ராணி என் எஜமானி அல்ல; எந்த ஊர் ராணியும் என் எஜமானி அல்ல. பத்திரகாளி துர்க்கா பரமேசுவரிதான் என்னுடைய எஜமானி!'' என்றான்.

''என் குலதெய்வமும் துர்க்கா பரமேசுவரிதான்! அவளுடைய அருளினால்தான் நடுக் கடலில் எரிகிற கப்பலிலிருந்து தப்பித்து வந்தேன். என்னைத் தொட்டாயானால் துர்க்கை உன்னை அதம் செய்து விடுவாள்!'' என்றான் வந்தியத்தேவன்.

''நீ துர்க்கையின் பக்தன் என்பது உண்மையானால், இப்பொழுது எனக்கு ஒரு காரியம் செய்ய வேண்டும். அப்போதுதான் உன்னைக் கொல்லாமல் விடுவேன்!'' என்றான் தேவராளன்.

''என்ன செய்ய வேண்டும்! — முதலில், உன்னுடைய நாயை அப்பால் போகச் சொல்லு!''

''இந்தப் பக்கம் ஒரு வீர வைஷ்ணவன் வந்தான். அவனைத் தேடிப் பிடிப்பதற்கு நீ ஒத்தாசை செய்தால் உன்னைச் சும்மா விட்டு விடுகிறேன்.''

''எதற்காக அவனைப் பிடிக்க வேண்டும்?'' என்றான் வந்தியத்தேவன்.

''துர்க்காதேவிக்கு ஒரு வீர வைஷ்ணவனைப் பலி கொடுப்பதாக நான் சபதம் செய்திருக்கிறேன். அதற்காகத்தான்!'' என்றான் தேவராளன்.

இந்தச் சமயத்தில் வந்தியத் தேவன் மதிள் சுவரில் பிடித்துத் தொங்கிக் கொண்டிருந்த சிறிய செடி வேரோடு பெயர்ந்து வர ஆரம்பித்தது.

வேலின் முனையில் சிக்காமல் எப்படித் தேவராளன் கழுத்தின் மேல் குதிப்பது என்று வந்தியத்தேவன் யோசித்துக் கொண்டே, ''அந்த வீர வைஷ்ணவன் என் அருமைச் சிநேகிதன். அவனுக்கு ஒரு போதும் நான் துரோகம் செய்ய மாட்டேன். அவனுக்குப் பதிலாக என்னையே பலி கொடுத்துவிடு!'' என்றான்.

''அப்படியானால் இந்த வேலுக்கு இப்போதே இரையாகிவிடு!'' என்று தேவராளன் வேலைத் தூக்கி வந்தியத் தேவன் மீது குறி பார்த்தான்.

வந்தியத் தேவன் செடியை விட்டு விட்டு வேலின் முனைக்கு அடியில் அதைத் தாவிப் பிடித்துக் கொண்டு கீழே குதித்தான். குதித்த வேகத்தில் தரையில் மல்லாந்து விழுந்தான். தேவராளன் அந்த அதிர்ச்சியைச் சமாளித்துக் கொண்டு வேலைத் தூக்கினான்.

அந்தச் சமயத்தில் பின்னாலிருந்து ஓர் உருவம் ஓடி வந்து தன் கையிலிருந்த தடியினால் தேவராளன் தலையில் ஓங்கி ஒரு போடு போட்டது.

தேவராளன் வந்தியத் தேவன்மேல் பொத்தென்று விழுந்தான்.

நாய் தன் எஜமானனைத் தாக்கியவன் பேரில் பாய்ந்தது. ஆழ்வார்க்கடியான் அதற்கும் சித்தமாயிருந்தான். தன்னுடைய மேல் துணியை விரித்து நாயின் தலைமீது போட்டான். நாய் சில விநாடி நேரத்துக்குக் கண் தெரியாத குருடாகியிருந்தது. அச்சமயம் சுருக்குப் போட்டுத் தயாராக வைத்திருந்த காட்டுக் கொடியை அதன் கழுத்தில் எறிந்து வைஷ்ணவன் நாயை ஒரு மரத்தோடு சேர்த்துப் பலமாகக் கட்டினான்.

இதற்குள் வந்தியத்தேவன் தேவராளனைத் தன் மேலிருந்து தூக்கித் தள்ளி விட்டு எழுந்தான்.

தேவராளன் வைஷ்ணவனுடைய ஒரே அடியில் நினைவு இழந்து மூர்ச்சையாகிக் கிடந்தான். இருவரும் இன்னும் சில காட்டுக் கொடிகளைப் பிடுங்கி அவனுடைய கால்களையும் கைகளையும் கட்டிப் போட்டார்கள்.

பிறகு வந்தியத் தேவன் வேலையும் ஆழ்வார்க்கடியான் கைத்தடியையும் எடுத்துக் கொண்டு கிளம்பினார்கள்.

சம்புவரையர் மாளிகையின் வாசற் பக்கத்தைத் தவிர மற்ற மூன்று பக்கங்களிலும் நெடுந் தூரத்துக்குக் காடு மண்டிக் கிடந்தது. அதற்குள்ளே புகுந்து விட்டால் வெளியில் வருவது கஷ்டம். ஆகையால் வந்தியத்தேவனும் ஆழ்வார்க்கடியானும் மதிள் சுவர் ஓரமாகவே விரைந்து சென்றார்கள்.

விரைந்து நடக்கும்போதே ஆழ்வார்க்கடியான், ''நீ புத்திசாலி என்று நினைத்தேன். நான் நினைத்தது தவறு என்று இப்போது தெரிந்தது!'' என்றான்.

''அவசரப்பட்டுச் சுரங்க வழியில் புகுந்ததைச் சொல்கிறீரா? அதன் மூலமாக எவ்வளவு பயங்கரமான மர்மங்களைக் கண்டுபிடித்திருக்கிறேன் தெரியுமா ?'' என்றான் வந்தியத்தேவன்.

'' அது ஒருபுறம் இருக்கட்டும். 'வைஷ்ணவனைக் கண்டுபிடிப்பதற்கு ஒத்தாசை செய்கிறாயா?' என்று தேவராளன் கேட்டதும், 'ஆகட்டும்' என்று சொல்லித் தொலைப்பதற்கு என்ன ? வீணாக ஏன் அபாயத்துக்கு உள்ளாக வேண்டும்?'' என்றான் வைஷ்ணவன்.

''எல்லாம் சகவாச தோஷந்தான்!'' என்றான் வந்தியத்தேவன்.

''யாருடைய சகவாசத்தைச் சொல்கிறாய்? இத்தகைய தவறு செய்யும்படி நான் உனக்கு ஒருநாளும் சொன்னதாக நினைவில்லையே?''

''உம்மைச் சொல்லவில்லை, ஐயா! பொன்னியின் செல்வரைச் சொல்லுகிறேன். அவரைப் பார்த்துப் பழகிய பிறகு, பொய் சொல்லுவதற்கு உள்ளம் இடம் கொடுக்கவில்லை....''

'' உயிர் தப்புவதற்காகக் கூடவா? அவ்வளவு சத்தியசந்தனாகிவிட்டாயா?''

''அதுமட்டுமல்ல. நீர் எங்கேயோ பக்கத்தில் மறைந்திருக்கிறீர் என்று எனக்குத் தெரியும். நான் உம்மைப் பிடித்துக் கொடுக்கிறேன் என்று தேவராளனிடம் சொல்வதை நீர் கேட்டுக்கொண்டிருந்து அதை உண்மை என்று நம்பிவிட்டால்! இந்த ஆபத்துச் சமயத்தில் எனக்கு உதவி செய்ய வந்திருப்பீரா?''

''அப்பனே! உன் அறிவுக் கூர்மை அபாரம்; சந்தேகமில்லை. உண்மையில், தேவராளன் கேட்ட கேள்விக்கு நீ என்ன பதில் சொல்லப் போகிறாய் என்று கேட்க நான் மிகுந்த ஆவலாய்த்தான் இருந்தேன் !''

''பார்த்தீரா ? நீர் ஒரு சந்தேகப் பிராணி என்று நான் கருதியது சரியாய்ப் போயிற்று. அதைத் தவிர, எப்பேர்ப்பட்ட நன்மை வருவதாயிருந்தாலும் வாய் வார்த்தைக்குக்கூடச் சிநேகத் துரோகமாக எதுவும் நான் சொல்லும் வழக்கமில்லை. ஆனால் நீர் 'அய்யனார் கோயிலில் காத்திருக்கிறேன்' என்று சொல்லி விட்டு இங்கு வந்தது எப்படி? சுரங்கவழியில் நான் திரும்பி வந்திருந்தால் உம்மைக் காணாமல் திண்டாடி யிருப்பேனே ?'' என்றான் வந்தியத்தேவன்.

''சுரங்க வழியில் நீ திரும்பி வந்திருந்தால் உயிரோடு வந்திருப்பது சந்தேகந்தான். நீ சுரங்க வழியில் புகுந்து சிறிது நேரத்துக்கெல்லாம் சதிகாரர்கள் அதில் புகுந்தார்கள். நீ புத்திசாலியாகையால் நிச்சயம் வேறு வழியாகத்தான் வருவாய், அநேகமாக இங்கே சுவர் ஏறிக் குதித்து வரக்கூடும் என்று எண்ணினேன்.''

''அவ்வாறு எண்ணிக்கொண்டா இவ்விடத்துக்கு வந்தீர் ?''

''அது மட்டுமல்ல. சுரங்கப் பாதையில் புகுந்த சதிகாரர்கள் தேவராளனை மட்டும் வெளியில் காவலுக்கு வைத்து விட்டுச் சென்றார்கள். அவர்கள் திரும்பி வரும்போது அய்யனார்கோயிலில் யாரும் இல்லாமலிருக்க வேண்டாமா? அதற்காக ஏதோ சமிக்ஞை சொல்லி விட்டுப் புகுந்தார்கள் போலிருக்கிறது. ஆனால் அது எனக்குத் தெரியாது. எல்லாரும் சுரங்கத்துக்குள் புகுந்து விட்டார்கள் என்று நினைத்தேன். நீ உள்ளே போய் அகப்பட்டுக் கொண்டிருக்கிறாயே என்று வேறு கவலையா யிருந்தது. சுரங்கப் பாதையை வெளியிலிருந்து திறப்பதற்கு என்ன உபாயம் என்று தெரிந்து கொள்ளவும் விரும்பினேன். ஆகையால் பலிபீடத்தின் அருகில் சென்று அதைத் திருப்ப முயன்று கொண்டிருந்தேன். காலடிச் சத்தம் கேட்டுத் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தேன். தேவராளன் கையில் வேலுடன் வந்துகொண்டிருந்தான். என்னைக் கண்ட இடத்தில் கொன்றுவிடச் சதிகாரக் கூட்டத்தார் வெகு நாளைக்கு முன்பே தீர்மானித்திருந்தார்கள். அது எனக்குத் தெரியும். என் கையிலோ ஆயுதம் இல்லை. ஆகையால் ஓட்டம் பிடிப்பதைத் தவிர வேறு வழி இல்லை. தேவராளனும் தொடர்ந்து ஓடி வந்து கொண்டிருந்தான். அடர்ந்த காடாக இருந்தபடியால் அவனால் என்னைப் பிடிக்க முடியவில்லை. வேலை எறியவும் முடியவில்லை. கொஞ்ச நேரத்துக்குப் பிறகு என்னை அவன் தொடர்ந்து வரவில்லை என்று தோன்றியது. வேட்டையைக் கைவிட்டு விட்டான் என்று எண்ணிக் காட்டிலிருந்து இனி இராஜ பாட்டைக்குப் போய்விடலாம் என்று உத்தேசித்தேன். சற்றுத் தூரத்தில் ஒரு குடிசை தெரிந்தது. அதில் ஒரு சிறிய விளக்கு 'மினுக்கு மினுக்கு' என்று பிரகாசித்துக் கொண்டிருந்தது. அந்தக் குடிசையில் இராஜ பாட்டைக்கு வழி கேட்கலாம் என்று நினைத்து அதை அணுகினேன். சற்றுத் தூரத்திலிருந்து உற்றுப் பார்த்தேன். நல்ல வேலையாய்ப் போயிற்று. குடிசை வாசலில் தேவராளன் நின்று கொண்டிருந்தான். ஒரு பெண் பிள்ளையும் ஒரு நாயும் அவன் அருகில் நின்றார்கள். தேவராளன் பெண் பிள்ளையிடம் ஏதோ சொல்லிவிட்டு நாயை அழைத்துக் கொண்டு மறுபடியும் புறப்பட்டான். நாய் நான் நின்ற திசையை

நோக்கிக் குரைத்தது. ஆகவே அபாயம் இன்னும் அதிகமாயிற்று. ராஜபாட்டைக்குப் போகும் உத்தேசத்தைக் கைவிட்டுக் காட்டு வழியிலேயே புகுந்து ஓடி வந்தேன். நாய் அடிக்கடி குரைத்துக் கொண்டு வந்தபடியால் அவர்கள் எங்கே வருகிறார்கள் என்பதை நான் ஊகிக்க முடிந்தது. ஓடி வந்து கொண்டிருக்கும் போதே மூளையும் வேலை செய்து கொண்டிருந்தது. இரவு முழுவதும் காட்டில் சுற்றிக் கொண்டிருப்பது அசாத்தியம். எப்படியும் அவர்கள் வந்து பிடித்து விடுவார்கள். கையில் வேலுடன் கூடிய தேவராளனையும் வாயில் பல்லுடன்கூடிய வேட்டை நாயையும் ஏககாலத்தில் சமாளிப்பது சுலபம் அல்ல. அச்சமயத்தில் இப்பெரிய மாளிகையின் மதில் சுவர் தெரிந்தது. மதிலில் ஏறி உள்ளே குதித்து விட்டால் எப்படியாவது சமாளித்துக் கொள்ளலாம் என்று எண்ணினேன். அப்படியே ஏறிவிட்டேன். அச்சமயம் நீ அரண்மனை மேன்மாடத்தில் ஓடி வந்துகொண்டிருப்பதைப் பார்த்தேன். நீ மதிள் ஏறி வெளியே குதிப்பதற்குத்தான் ஓடி வருகிறாய் என்று தெரிந்து கொண்டு மறுபடியும் கீழே குதித்தேன். நாம் இரண்டு பேருமாகச் சேர்ந்து தேவராளனையும் அவனுடைய நாயையும் சமாளித்துவிடலாம் என்ற நம்பிக்கை ஏற்பட்டது. இதற்குள் நாய் குரைக்கும் சத்தம் கேட்கவே பக்கத்திலிருந்த மரத்தின் மேலே ஏறிக் கொண்டேன். நாயும் தேவராளனும் நான் ஏறியிருந்த மரத்தை அணுகித்தான் வந்தார்கள். அதற்குள் நீ மதில்சுவரிலிருந்து இறங்கியது தேவராளனின் கண்ணில்பட்டது போலும். நாயையும் அழைத்துக் கொண்டு நீ இருக்குமிடத்தை நெருங்கினான். பிறகு நடந்ததெல்லாம் உனக்குத் தெரியும்....''

''வைஷ்ணவரே! விதியின் வலிமையைப் பற்றி உமது அபிப்பிராயம் என்ன ?'' என்று வந்தியத் தேவன் கேட்டான்.

''இது என்ன கேள்வி! திடீரென்று விதியின் பேரில் உன்னுடைய எண்ணம் போனது ஏன்?''

''ஒவ்வொருவனும் பிறக்கும்போதே 'இன்னாருக்கு இன்னபடி' என்று பிரம்மதேவன் தலையில் எழுதிவிடுவதாகச் சொல்கிறார்களே! அதை நீர் நம்புகிறீரா, இல்லையா ?''

''இல்லை! எனக்கு விதியில் நம்பிக்கை இல்லை. விதியை முழுதும் நம்புவதாயிருந்தால், பரந்தாமனிடம் பக்தி செய்து உய்யலாம் என்பதற்குப் பொருள் இல்லாமற் போய்விடும் அல்லவா ? ஆழ்வார்கள் என்ன சொல்லியிருக்கிறார்களென்றால்...''



அமரர் கல்கி அவர்கள் தமது மடியில் வைத்துக் கொஞ்சி மகிழ்ந்த ஒரே பேரக் குழந்தை கௌரி. ''கௌரிக் கண்மணி'' என்றேதான் அழைப்பார்; 'கௌரி' என்றல்ல !

அது சரி, இந்தத் தாத்தா - பேத்தி படத்தை இங்கே இப்போது வெளியிடுவதன் நோக்கம்......?

(43ம் பக்கம் பார்க்க)

''ஆழ்வார்கள் எதையாவது சொல்லியிருக்கட்டும். எனக்கு விதியில் பூரண நம்பிக்கை உண்டாகியிருக்கிறது. விதியின்படிதான் எல்லாம் நடக்கும் என்று கருதுகிறேன். இல்லாமற் போனால் இன்றைக்கு நான் தப்பித்துக் கொண்டு வந்திருக்க முடியாது....''

''அப்பனே! விதியினால் நீ தப்பித்து வரவில்லை. மதியின் உதவியினால் தப்பித்து வந்தாய்.....''

''இல்லவே இல்லை; என் மதி என்னை ஆழந் தெரியாத அபாயத்தில் கொண்டு போய்ச் சேர்த்தது. விதி என்னை அதிலிருந்து கரையேற்றியது!''

இப்படி அவர்கள் பேசிக்கொண்டிருக்கும் போதே காட்டைக் கடந்து வந்து விட்டார்கள். கடம்பூர் அரண்மனையின் முன் வாசல் அங்கிருந்து தெரிந்தது. அங்கு ஒரே அல்லோல கல்லோலமாக இருந்ததும் தெரிந்தது. பழுவேட்டரையரின் யானை, குதிரை, பரிவாரங்கள் வெளியிலிருந்து வாசலை நெருங்கி வந்து

கொண்டிருந்தன. அமோகமாக அலங்கரிக்கப்பட்டிருந்த அரண்மனை வாசலில் சம்புவரையரும் அவருடைய பரிவாரங்களும் வரவேற்பதற்குக் காத்திருந்தார்கள். நூற்றுக்கணக்கான தீவர்த்திகள் இரவைப் பகலாக்கிக் கொண்டிருந்தன. பேரிகைகள், முரசுகள், கொம்புகள், தாரைகள், தப்பட்டைகள் ஒன்று சேர்ந்து முழங்கின.

ஆழ்வார்க்கடியான் வந்தியத்தேவனுடைய கையைப் பிடித்து இழுத்து, "வா! போகலாம், யாராவது நம்மைப் பார்த்துவிடப் போகிறார்கள்!" என்றான்.

"இந்தப் பக்கம் ஒருவரும் பார்க்க மாட்டார்கள். பார்த்தாலும் என்னுடைய விதி என்னைக் காப்பாற்றும்."

"அப்படியாவது எதற்காக இங்கே நிற்க வேண்டும்?"

"பெரிய பழுவேட்டரையர் யானை மீது வந்து இறங்கும் காட்சியைப் பார்க்க வேண்டாமா?"

"அது மட்டுந்தானா?"

"பழுவூர் ராணி நந்தினி அவருடன் யானை மீதில் வந்து இறங்குகிறாளா, அல்லது மூடுபல்லக்கில் வருகிறாளா என்று பார்க்கவும் விரும்புகிறேன்....."

"தம்பி! விதி எப்போதும் உனக்கு அனுகூலமாக இருக்கும் என்று எண்ணாதே! ஒரு மாய மோகினியின் உருவத்தில் வந்து உன்னைக் குடை கவிழ்த்தாலும் கவிழ்த்து விடும்...."

"அப்படியெல்லாம் மயங்கி விடுகிறவன் நான் அல்ல, வைஷ்ணவரே! அதற்கு வேறு ஆட்கள் இருக்கிறார்கள்!"

கம்பீரமான யானை வந்து அரண்மனை வாசலில் நின்றது. அதன்மேலிருந்து பெரிய பழுவேட்டரையர் இறங்கினார். அவரைத் தொடர்ந்து பழுவூர் இளைய ராணியும் இறங்கினாள்.

"ஓ! இந்தத் தடவை இளையராணி மூடு பல்லக்கில் வரவில்லை. பகிரங்கமாகவே அழைத்து வந்திருக்கிறார்!" என்றான் ஆழ்வார்க்கடியான்.

"அதைத் தெரிந்து கொள்ளத்தான் விரும்பினேன். இனி போகலாம்" என்று வந்தியத்தேவன் பின்னால் சென்றான்.

ஆனால் இப்போது ஆழ்வார்க்கடியான் பின் செல்வதற்கு அவ்வளவு அவசரப்படவில்லை. மேலும் அந்த இடத்திலேயே நின்று கொண்டிருந்தான். பழுவூர் இளைய ராணி நந்தினியைக் கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தான்.

தற்செயலாகவோ அல்லது அவனது மனோசக்தியினால் இழுபட்டுத்தானோ என்னவோ நந்தினி அந்தப் பக்கம் திரும்பிப் பார்த்தாள்.

ஆழ்வார்க் கடியானுடைய முகம் இருண்ட மரங்களின் மத்தியிலிருந்து, எட்டிப் பார்த்துக் கொண்டிருந்ததைக் கூர்ந்து கவனித்தாள்.

அவள் முகத்தில் உடனே பீதியின் சாயல் பரவிற்று.

இளைய ராணியின் முக மாறுதலைப் பெரிய பழுவேட்டரையர் கவனித்தார். அவள் பார்த்த திசையை அவரும் ஒரு தடவை கூர்ந்து நோக்கினார்.

இரண்டு உருவங்கள் நெருங்கி வளர்ந்திருந்த மரங்களின் இருண்ட நிழலில் மறைந்து கொண்டிருந்தன.

உடனே சம்புவரையரின் காதோடு ஏதோ சொன்னார்.

சம்புவரையர் தம்முடைய வீரர்களில் இருவருக்கு ஏதோ கட்டளையிட்டார்.

பழுவேட்டரையரும் இளையராணியும் அமோகமான வாத்திய கோஷங்களுக்கிடையில் அரண்மனை வாசல் வழியாக உள்ளே பிரவேசித்தார்கள்.

அதே சமயத்தில் இரண்டு குதிரை வீரர்கள் அரண்மனை மதிளைச் சுற்றியிருந்த காட்டுக்குள் பிரவேசித்தார்கள்.

குதிரைகளைக் காட்டுக்குள் அவர்கள் கஷ்டத்துடன் செலுத்திக் கொண்டு போனார்கள்.

வெகுதூரம் சென்றும் யாரும் இருப்பதாகத் தெரியவில்லை. கிட்டத்தட்ட காட்டைக் கடந்து அப்புறத்தில் சமவெளியாக இருந்த திறந்த மைதானத்தண்டை வந்து விட்டார்கள்.

"அண்ணே! காட்டில் ஒருவரும் இல்லை. கிழவரின் மனப்பிராந்திதான்!" என்றான் அவர்களில் ஒருவன்.

அச்சமயம் நாய் ஒன்று அவர்களுக்கெதிரே ஊளையிட்டுக் கொண்டு வந்தது.

"தம்பி! நாய் எப்போது ஊளையிடும் தெரியுமா?" என்று மற்றவன் கேட்டான்.

"யாராவது செத்துப் போனால் ஊளையிடும்!" என்றான் முதலில் பேசியவன்.

"பேய் பிசாசு வேதாளம் முதலியவைகளைக் கண்டாலும் ஊளையிடும்!" என்றான் இன்னொருவன்.

"உன்னைப் பார்த்துத்தான் பிசாசு என்று நினைத்துக் கொண்டு விட்டதோ என்னமோ?"

"இல்லை, தம்பி! உன்னை வேதாளம் என்று எண்ணிக் கொண்டு விட்டது!"

இந்தச் சமயத்தில் அவர்களுடைய தலைக்கு மேலே பயங்கரமான பேய்ச் சிரிப்பைக் கேட்டு இருவரும் திடுக்கிட்டு அண்ணாந்து பார்த்தார்கள்.

இரண்டு பேர்களின் தலைக்கு மேலேயும் இரண்டு மரக் கிளைகளில் இரண்டு வேதாளங்கள் உட்கார்ந்து கொண்டிருந்தன!

இரண்டு வேதாளங்களும் அந்த இரண்டு வீரர்களின் கன்னத்திலும் பளீர் என்று அறைந்து, கழுத்தைப் பிடித்து நெட்டிக் கீழே தள்ளின!

பிறகு அந்தப் பொல்லாத வேதாளங்கள் குதிரைகளின் மீது ஏறிக்கொண்டு காட்டைக் கடந்து திறந்த மைதானத்தில் விரைந்து சென்றன!

## பதினோராம் அத்தியாயம்

# தோழனா? துரோகியா?

**ம**ணிமுத்தா நதி வெள்ளாற்றில் கலக்கும் வனப்பு வாய்ந்த இடத்தைத் தாண்டி ஆதித்த கரிகாலனும் அவனுடைய தோழர்களும் பரிவாரங்களும் வந்து கொண்டிருந்தார்கள்.

முதல் நாள் இரவு திருமுதுகுன்றத்தில் இளவரசருக்கு நடந்த உபசாரங்களைப் பற்றியும், அந்த க்ஷேத்திரத்தில் நடந்து கொண்டிருந்த ஆலயத் திருப்பணியைப் பற்றியும் அவர்கள் பேசிக் கொண்டு வந்தார்கள்.

''திருமுதுகுன்றத்தில் சுந்தரமூர்த்தி நாயனார் செய்த காரியம் எனக்கு ரொம்பப் பிடித்திருக்கிறது!'' என்றான் பார்த்திபேந்திரன்.

''எதைப் பற்றிச் சொல்லுகிறாய்?'' என்று ஆதித்த கரிகாலன் கேட்டான்.

''கிழவியைப் பாடமாட்டேன் என்று சொன்னதைத்தான்.''

''அது என்ன? எனக்குத் தெரியாதே விவரமாகச் சொல்'' என்றான் ஆதித்த கரிகாலன்.

சுந்தரமூர்த்தி நாயனார் க்ஷேத்திர யாத்திரை செய்து கொண்டு வந்த பொழுது திருமுதுகுன்றம் என்னும் விருத்தாசலத்துக்கு வந்தார். வழக்கம் போல் அந்த ஊர்ச் சிவாலயத்துக்குச் சென்றார். பட்டர்கள் நாயனாருக்குச் சுவாமி தரிசனம் பண்ணுவித்து, ''எங்கள் ஊர் இறைவன் பேரிலும் பதிகம் பாடி அருள வேண்டும்!'' என்று கேட்டுக் கொண்டார்கள்.

''பார்ப்போம். இந்த ஆலயத்திலுள்ள சுவாமியின் பெயர் என்ன?'' என்று சுந்தரர் கேட்டார்.

திருமுதுகுன்றம் என்ற பெயரைக் கொண்டு அந்தச் சிவாலயத்திலுள்ள சுவாமிக்கு விருத்தகிரீசுவரர் என்று பெயர் சூட்டியிருந்தார்கள். பட்டர்கள் அந்தப் பெயரைச் சொன்னார்கள்.

நாயனாரின் முகம் சுருங்கிற்று. போயும் போயும் கிழவரையா பாட வேண்டும் என்று மனத்தில் எண்ணிக் கொண்டு, ''போகட்டும்; அம்மன் பெயர் என்ன?'' என்று வினவினார்.

''விருத்தகிரீசுவரி'' என்றார்கள் கோவில் பட்டர்கள்.

''சுவாமிக்குத்தான் கிழவர் என்று பட்டம் கட்டினீர்கள்; அம்மனையும் கிழவியாக்கி விட்டீர்களே? கிழவனையும் கிழவியையும் என்னால் பாட முடியாது போங்கள்!'' என்று சொல்லி விட்டுச் சுந்தர மூர்த்தி நாயனார் கோபமாகக் கோவிலை விட்டுக் கிளம்பி விட்டார்.

சுந்தரமூர்த்தி நாயனாரால் பதிகம் பாடப் பெறாவிட்டால் தங்கள் ஊர் ஆலயத்துக்கு மகிமை ஏற்படாது என்று பட்டர்கள் கருதினார்கள்.

ஆகையால் ஆலயத்தில் இன்னொரு அம்மனைப் பிரதிஷ்டை செய்து, 'பாலாம்பிகை' என்று பெயர் சூட்டினார்கள்.

மறுபடியும் சுந்தரமூர்த்தி நாயனார் இருந்த இடத்துக்குப் போய் அவரிடம் மேற்படி விவரத்தைச் சொல்லித் திரும்பவும் திருமுதுகுன்றம் ஆலயத்துக்கு விஜயம் செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொண்டார்கள். சுந்தரமூர்த்தி நாயனார் பெரிய மனசு செய்து மீண்டும் அந்த ஊருக்குச் சென்று பாலாம்பிகை சமேத விருத்தகிரீசுவரர் மீது பதிகம் பாடித் துதித்தார்!

**இ**ந்தக் கதையைக் கேட்டுவிட்டு ஆதித்த கரிகாலன் உடல் குலுங்கக் குலுங்கச் சிரித்தான்.

''பெரிய பழுவேட்டரையரிடம் வந்து கவிஞன் யாராவது ஒருவேளை சுந்தரமூர்த்தியைப் போல் சொல்லியிருப்பான். கிழவனையும் கிழவியையும் பாடமாட்டேன் என்று கூறியிருப்பான். அதற்காகத்தான் அவர் நந்தினியை மணந்து கொண்டாரோ என்னமோ?'' என்றான்.

இதைக் கேட்டுப் பார்த்திபேந்திரனும் கந்தமாறனும் விழுந்து விழுந்து சிரித்தார்கள். அப்படி அவர்கள் சிரித்த சிரிப்பில் குதிரை மேலிருந்து கீழே விழுந்து விடுவார்கள் போலிருந்தது.

சிரித்து ஓய்ந்த பிறகு, பார்த்திபேந்திரன், ''கடவுள் முதுமை என்பதாக

விடை: ஒரு சாதாரணமான வெண்டைக் காய்தான் அது. வெண்டையின் பக்கங்களை க்ஷவர பிளேடினால் சாதுர்யமாக வகிர்ந்து வைத்து எடுத்த புகைப்படந்தான் அவ்வளவு அழகாகக் காட்சியளிக்கிறது.
படம் அனுப்பியவர்: ஜெயச்சந்திரன்

ஒன்றை எதற்காக ஏற்படுத்தியிருக்கிறாரோ தெரியவில்லை. அவரவர்களும் அவரவர்களுக்கு விதிக்கப்பட்ட வயது வரையில் ஒரே மாதிரி இருந்துவிட்டுச் சாவது என்று ஏற்படுத்தியிருக்கக் கூடாதோ?'' என்றான்.

''கடவுள் என்ன ஏற்படுத்தினால் என்ன? முதுமை அடைவதும் அடையாததும் நம்முடைய கையிலேதானே இருக்கிறது?'' என்றான் கரிகாலன்.

''அது எப்படி முடியும்?'' என்று கந்தமாறன் கேட்டான்.

''அபிமன்யுவையும் அரவானையும் கிழவர்கள் என்று நாம் எண்ணுவதுண்டா?''

மற்ற இருவரும் ஒன்றும் கூறாமல் மௌனமாயிருந்தார்கள்.

''தஞ்சாவூர் அரண்மனைச் சித்திர மண்டபத்தில் என்னுடைய மூதாதையர்களின் சித்திரங்கள் எல்லாம் எழுதியிருக்கின்றன. விஜயாலய சோழர், ஆதித்த சோழர், பராந்தக சக்கரவர்த்தி எல்லாரும் முதிய பிராயத்தவராகக் காட்சியளிக்கிறார்கள். ஆனால் என் பெரிய பாட்டனார் இராஜாதித்தர் எப்படி இருக்கிறார்? நவயௌவன வீர புருஷராக விளங்குகிறார்! இராஜாதித்தர் இளம் வயதில் இறந்து போனார்; அதனால் என்றைக்கும் அவர் யௌவனம் நீங்காத பாக்கியசாலி ஆனார்! நம்மில் யாருக்கு அத்தகைய பாக்கியம் கிட்டுகிறதோ தெரியவில்லை!''

மற்ற இருவருக்கும் இந்தப் பேச்சு அவ்வளவாகப் பிடிக்கவில்லை. அவர்கள் மௌனமாகவே இருந்தார்கள்.

''ஏன் திடீரென்று மௌனமாகிவிட்டீர்கள்? சாவு என்றால் உங்களுக்கு ஏன் இவ்வளவு பயம்? இந்த உடம்பு போனால் இன்னொரு புத்தம் புதிய உடம்பு கிடைக்கிறது. எதற்காக மரணத்துக்கு அஞ்ச வேண்டும்? என்னுடைய நண்பன் வந்தியத் தேவன் இங்கே இருந்தால் என்னை ஆமோதிப்பான். அவனைப் போன்ற உற்சாக புருஷனைக் காண்பது அரிது. யமலோகத்தின் வாசலில் கொண்டு போய் விட்டாலும் அவன் குதூகலமாகச் சிரிப்பான்!'' என்றான் இளவரசன் கரிகாலன்.

அச்சமயத்தில் அவர்களுக்கு எதிரே சாலையில் இரண்டு குதிரைகள் புழுதியைக் கிளப்பிக் கொண்டு வெகு வேகமாக வருவதை அவர்கள் பார்த்தார்கள். கண் மூடித் திறக்கும் நேரத்தில் அந்தக் குதிரைகள் அவர்களை நெருங்கி வந்துவிட்டன. அவை வந்த வேகத்தைப் பார்த்தால் இளவரசர் கோஷ்டி எதிரில் வருவதைக் கூடக் கவனியாமல் தாண்டிப் போய்விடும் எனத் தோன்றியது.

அவ்வளவு அகம்பாவம் பிடித்தவர்கள் யார் என்று பார்ப்பதற்காகக் கந்தமாறனும் பார்த்திபேந்திரனும் வேல்களை நீட்டிச் சாலையின் குறுக்கே வழிமறிக்க ஆயத்தமானார்கள்.

ஆனால் வந்த குதிரைகள் அவர்களுக்குச் சிறிது தூரத்தில் தடால் என்று பிடித்து இழுத்து நிறுத்தப்பட்டன.

வந்தியத்தேவனும் ஆழ்வார்க்கடியானும் குதிரைகள் மீதிருந்து கீழே குதித்தார்கள்.

வந்தியத்தேவனைக் கண்டதும் இளவரசன் ஆதித்த கரிகாலனுக்குக் குதூகலம் தாங்கவில்லை. அவனும் குதிரை மீதிருந்து கீழே குதித்து முன்னேறிச் சென்று வந்தியத்தேவனைக் கட்டித் தழுவிக் கொண்டான்.

''தம்பி! உனக்கு வயது நூறு. இப்போதுதான் உன் பெயரைச் சொல்லி ஒரு கண நேரம் கூட ஆகவில்லை'' என்றான் கரிகாலன்.

கந்தமாறனும் பார்த்திபேந்திரனும் இந்தக் காட்சியைப் பார்த்து அடைந்த அருவருப்பை அவர்கள் முகத்தில் தெரிந்தது. அவர்கள் சற்று முன்னால் குதிரையைச் செலுத்திக் கொண்டுபோய் நின்றார்கள்.

சிறிது தூரத்தில் இன்னும் சில குதிரைகள் வருவதை அவர்கள் கண்டார்கள். சில நிமிஷங்களுக்கெல்லாம் அந்தக் குதிரைகளும் வந்து நின்றன. அந்தக் குதிரைகளின்மீது வந்தவர்கள் கடம்பூர் ஆட்கள் என்பதைக் கந்தமாறன் கவனித்தான். அவர்களிடம் நெருங்கிச் சென்று விவரம் கேட்டான்.

பின்னர், இளவரசன் ஆதித்த கரிகாலனிடம் வந்தான். ''கோமகனே! இந்த வந்தியத் தேவன் தங்களுக்கு நண்பன்; எனக்கும் சிநேகிதனாகத்தான் இருந்தான். ஆனால் இவன் மீது நான் குற்றம் சுமத்தவேண்டியதாயிருக்கிறது. இவன் சிநேகத் துரோகி! இவன் என்னை முதுகில் குத்திப் படுகாயப் படுத்தினான்! ஆகையால் இவன் விஷயத்தில் தாங்கள் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும் என்று எச்சரிப்பது என் கடமையாகிறது!'' என்றான் கந்தமாறன்.

(தொடரும்)

# ராமாயணம்

## ராஜாஜி

"ராமனே! தசரத சக்கரவர்த்தியின் புத்திரனுவாய். உத்தம குலத்தில் பிறந்த நீ, பெரும் புகழும் அடைந்த நீ, ஏன் இப்படிச் செய்தாய்? உன் நற்குணங்களும் ஒழுக்கமும் உலகம் அறிந்த விஷயம். இப்படியிருக்க நான் வேறொருவனிடம் யுத்தம் செய்து கொண்டு அதில் மனம் முற்றிலும் செலுத்தி வந்த சமயத்தில் என் கண்களுக்குத் தென்படாமல் மறைந்து நின்று என் மேல் பாணம் விட்டு என்னைக் கொன்ருய். உன்னைப் பற்றி ஜனங்கள் சொல்லும் புகழ்மொழிகளுக்கு இது முற்றிலும் விரோதமாயிருக்கிறதே! எல்லாப் பிராணிகளிடமும் கருணை கொண்டவன். தோஷ எண்ணங்களுக்கு இடம் கொடுக்காமல் புலன்களையும் உள்ளத்தையும் அடக்கியாள்பவன், அறவழியில் நிற்பவன், பொறுமை, சாந்தி, தருமம், சத்திய பராக்கிரமம் முதலிட உத்தம குணங்களையெல்லாம் பெற்றவன் என்று கீர்த்தி பெற்ருயே! இப்போது அவையெல்லாம் என்னவாயின? என்னைக் கொன்று நீ என்ன லாபம் பெறுவாய்? யோசிக்காமல் இந்த அதரும காரியம் செய்தாய். என் மனைவி உன்னைப் பற்றி என்னை எச்சரித்தாள்; அவள் பேச்சைத் தட்டிவிட்டு வந்தேன். நீ வேஷதாரி என்றும், துன்மார்க்கன் என்றும், புல்லால் மூடப்பட்ட பாழுங் கிணறு போன்ற பாவி என்றும் தெரியாமல், மனைவியின் பேச்சைக் கேளாமல், நான் என் தம்பியுடன் யுத்தத்துக்கு வந்தேன். உனக்கு என்ன தீமை நான் செய்தேன்? உன்னுடன் யுத்தம் செய்யவா நான் வந்தேன்? அதருமத்தில் இறங்கி, என்னை மறைந்து நின்று கொன்ருய். நல்ல அரச குலத்தில் பிறந்து பெரும் பாவத்தைச் செய்தாய். நிரபராதியைக் கொன்ருய். நீ அரச பதவிக்குத் தகுந்தவனல்ல. மோசக்காரனுன உன்னைப் பூதேவி மணக்க விரும்பமாட்டாள். நீ எப்படித் தசரதனுக்கு மகனுகப் பிறந்தாய்? தருமத்தைவிட்டு நீங்கின நீசனுல் கொல்லப்பட்டேன். என் கண்ணுக்கு முன் நின்று நீ யுத்தம் செய்திருந்தாயேல் இன்றே நீ செத்திருப்பாய். என்னை நீ வேண்டிக்கொண்டிருந்தால் ஒரே நாளில் சீதையை உன்னிடம் அழைத்து வந்து விட்டிருப்பேனே! சுக்ரீவனுக்காக என்னைக் கொன்ருயே! ராவணனைக் கொன்று பிரேதத்தைக் கழுத்தில் கயிறு போட்டுக் கட்டி உன்னிடம் இழுத்துக் கொண்டு வந்து விட்டிருப்பேனே! மைதிலியை எவ்விடம் மறைத்து வைத்திருந்தாலும் கண்டுபிடித்து உன்னிடம் ஒப்புவித்திருப்பேனே! பிறந்தவர்கள் இறப்பது விதி. ஆயினும் நீ முறை தவறி என்னைக் கொன்ருய். உன் குற்றம் பெருங்குற்றம்.''

இவ்வாறு தேவேந்திர குமாரனுன வாலி மரணுவஸ்தையில் ராமனைக் கண்டித்தான்.

வாலியின் இந்தக் குற்றச் சாட்டுக்கு ராமன் என்ன பதில் சொல்ல முடியும்? ஏதோ சொன்னதாகவும் அதைக் கேட்டு வாலி சமாதானப்பட்டதாகவும் வால்மீகி ராமாயணத்தில் சொல்லப்படுகிறது. அதில் சாரம் இல்லை என்று விட்டு விட்டேன். பெரியோர்கள் மன்னிப்பார்கள். ராமாவதாரத்தில் ஆண்டவனும் தேவியும் சகிக்க வேண்டிய துக்கங்களில் இந்தத் தவறும் பழியும் ஒன்று.

சுக்ரீவனுல் அடிபட்ட உடம்பெல்லாம் ரணகாயங்கள். அதன் மேல் ராம பாணத்தினுல் உண்டான மரணுவஸ்தை. இவற்றை யெல்



லாம் பொறுத்துக் கொண்டு கடைசியாக வாலி ராமனுக்கு ஒரு வார்த்தை சொன்னான்:

"ஏதாயினும் சரி, நான் இனி அதைப் பற்றித் தோஷம் சொல்ல வில்லை. எனக்கு மிகப் பிரியமான குமாரன் அங்கதன் மிகவும் துக்கப்படுவான். சுக்ரீவனும் நீயும் அவனைச் சரியாகப் பார்த்துக் கொள்ள வேண்டும். அவனை உன் வசம் ஒப்புவித்தேன். அவனைக் காப்பாற்றுவது உன் கடமையாகப் பாவிக்க வேண்டும். ஜலம் வற்றிப் போன குளத்திலுள்ள தாமரைக்கொடி போல் துக்கப்படுவான். நான் சுக்ரீவனுக்குச் செய்த கொடுமை தாரையின் தூண்டுதலால் என்று அவன் எண்ணாமலிருக்க வேண்டும். அங்கதனை அவன் கௌரவமாகவும் அன்புடனும் நடத்த வேண்டும். இதை நீ செய்தால் போதும். நான் வேறொன்றும் விரும்பவில்லை. வீரர்களுக்குரிய உலகம் எனக்குக் காத்திருக்கிறது" என்று சொல்லி விட்டு நினைவு இழந்தான்.

* * *

ஒன்று நிச்சயம். வாலியை ராமன் எதிர்த்து ஜெயித்திருக்க முடியாது. ராவணனைத் தேவர்கள் எதிர்க்க முடியாதிருந்தது போலவே இதுவும் வரத்தினால் ஏற்பட்ட நிலைமை. மறைந்து நின்றே தான் ராமன் வாலியைக் கொல்ல முடியும். ஆயினும் ஏன் வாலியைக் கொல்ல வேண்டும் என்கிற கேள்வி நிற்கிறது.

கபந்தனுடைய சாப விமோசன காலத்தில் அவன், "நீ சுக்ரீவனுடைய நட்பைச் சம்பாதித்துச் சீதையை அடைவாய்" என்று சொன்னபடி ராமன் சுக்ரீவனைத் தேடிச் சென்றான். அவனை அடைந்து அக்கினி சாட்சியாக நட்புப் பிரதிக்ஞையையும் செய்துவிட்டான்.

மன்னிக்கத் தகாத அபராதம் ஏதும் சுக்ரீவன் வாலிக்குச் செய்யவில்லை. அப்படியிருக்க, வாலி தான் பெற்றிருந்த பலத்தைக் கொண்டு தம்பியைப் படாத பாடு படுத்திக் கொடுமை செய்து வந்தான். இதைச் சொல்லி முறையிட்ட சுக்ரீவனுக்கு "உன் பகைவனை ஒழித்து மனைவியையும் ராஜ்யத்தையும் நீ மறுபடியும் அடையச் செய்வேன். இது சத்தியம்" என்று உறுதியான பிரதிக்ஞை செய்து விட்டான். இதன் மேல் வேறு வழியில்லை. வாலியை மறைந்து நின்று கொல்வது அவசியமாக ஏற்பட்டு விட்டது. காதல் மனைவியைத் திருப்தி செய்ய மாய மானைத் தேடிப் போனதின் பயனாக ஒன்றன்பின் ஒன்றாகச் சிக்கலும், துக்கமும், தரும சங்கடங்களும் ராமனைத் தொடர்ந்து வந்தன. இவ்வளவே என் சிற்றறிவுக்குக் காணப்படுவது.

# 59. தாரையின் துயரம்

வில்லேந்திய ஒருவனால் வாலி கொன்று வீழ்த்தப்பட்டான் என்கிற சமாசாரம் கிஷ்கிந்தையில் உள்ள வானரர்களுக்குத் தெரிந்ததும் அவர்கள் இங்குமங்கும் பயந்து ஓடினதைப் பார்த்தாள் தாரை.

"யுத்தம் என்றால் எப்போதும் அரசன் வாலிக்கு முன்னதாக இதுவரையில் புறப்பட்டுப் போய் வந்தீர்களே! ஏன் இப்போது இப்படிப் பயந்து ஓடுகிறீர்கள்? உங்களுக்கு ஒன்றும் ஆபத்து இல்லை. சுக்ரீவனை அரசனாக்குவதற்காக வாலியைக் கொன்றான் ராமன். அவ்வளவே. நீங்கள் அநாவசியமாகப் பயந்து ஓடாதீர்கள்! உங்களுக்கு ஒரு ஆபத்தும் இல்லை" என்று அரசிக்குரிய முறையில் தன் துக்கத்தைத் தள்ளிவிட்டு வானரர்களுக்குத் தைரியம் ஊட்டினாள்.

* * *

பிறகு தன் புருஷன் இறந்து கிடக்கும் இடத்துக்குப் போகப் புறப்பட்டாள். வானரர்கள் தடுத்தார்கள்.

"அங்கதனுக்குப் பட்டாபிஷேகம் செய்வோம். கோட்டையைப் பத்திரப் படுத்துவோம். நம்முடைய பகைவன் சுக்ரீவனும் அவனுடைய துணைவர்களும் வராமல் ஊரைக் காப்போம்!" என்று தாரையைப் போக விடாமல் தடுக்கப் பார்த்தார்கள்.

அவளோ, "என் வீர புருஷன் இறந்த பிறகு எனக்கு ஒன்றும் வேண்டியிருக்கவில்லை!" என்று சொல்லி நிர்ப்பயமாக ராம லக்ஷ்மணர்கள் இருந்த இடத்துக்கு நேராகச் சென்றாள்.

தரையில் விழுந்து கிடந்த தன் புருஷனைக் கண்டதும் துக்கத்தை அடக்கிக் கொள்ள முடியவில்லை. கதறி அழுதாள்.

"ஹா என் வீரனே! எத்தனை சூரர்களை நீ வீழ்த்தினாய்! இப்போது மாண்டு கிடக்கிறாயே! என்னை விட்டுப் போய் விட்டாயே!" என்று குத்துப் பட்டுக் கிடந்த வாலியை ஆலிங்கனம் செய்து கொண்டு அழுதாள்.

வாலியின் குமாரன் அங்கதனும் அங்கே வந்து சேர்ந்தான். இந்தக் காட்சியைக் கண்டபின் சுக்ரீவன் தன் பொருட்டு இவ்வளவு துயரம் ஏற்பட்டதே என்று துக்கப்பட ஆரம்பித்தான். இது வேஷமல்ல. இவ்வாறே உலகத்தில் துவேஷமும் பழி தீர்க்கும் காரியங்களும் ஆசைகளும் முடிவில் ஒரு நற்பயனும் சந்தோஷமுமின்றித் துக்கத்தில் முடிகின்றன. நேரில் கண்டு அநுபவித்த பின்னரே துவேஷத்தின் அற்பத்தனம் விளக்கமாகிறது. அறிவு அடைகிறோம். அதுவரையில் மோகத்தில் மூழ்கி உண்மையைக் காண்பதில்லை. (தொடரும்)











## சுதந்திரக் கட்சி மகாநாடு

சைதாப்பேட்டைத் தொகுதி சுதந்திரக் கட்சி அரசியல் மகாநாடு ஜூலை 5ம் தேதி மேற்கு மாம்பலம் லலித கலாநிகேதன் பந்தலில் நடந்தது. 1. மகாநாட்டில் திரு வி. எஸ். ஸ்ரீகுமாரின் உரை. 2. டாக்டர் எச். வி. ஹண்டே எம். எல். ஏ. மகாநாட்டு சிறப்பு மலரை வெளியிட்டுப் பேசுகிறார். 3. டாக்டர் எம். சந்தோஷம், எம். பி. தலைமை உரையாற்றுகிறார். 4. திரு சித்ரா நாராயணசாமி பேசுகிறார். 5. மகாநாட்டுக்கு வந்திருந்த பெருமக்களில் ஒரு பகுதி. 6. பேராசிரியர் எம். ரத்தினசாமியும், நகரசபை சுதந்திரக் கட்சி உறுப்பினர் திரு தேவநாதனும். 7. மகாநாட்டைத் தொடக்கி வைத்த திரு பிலு மோடி எம். பி.யும், துக்ளக் 'சோ'வும்.







மலையாளம்

# உலகப் புகழ் பெற்ற மூக்கு!

## வைக்கம் முகம்மது பஷீர்

திகைப்படையச் செய்யும் செய்தி. அறிவுடை மக்களிடையே பெரிய சர்ச்சைக்குக் காரணமாயிருக்கிறது அந்த மூக்கு.

அந்த மூக்கின் உண்மைக் கதையை இங்கு எழுதப் போகிறேன்.

உலகப் பிரசித்தி பெற்ற அந்த மூக்கின் சரிதை அவனுடைய இருபத்து நான்கு வயது பூர்த்தியான சமயத்தில் ஆரம்பமாகிறது. அதுவரையில் அவனை யாரும் அறிந்தாரில்லை. இந்த இருபத்திநான்கு வயதுக்கு ஏதாவது விசேஷம் உண்டோ என்னவோ? ஒன்று மட்டும் உண்மை. உலக சரித்திரத்தின் ஏடுகளைப் புரட்டிப் பார்த்தால், அநேக மகான்களின் இருபத்து நான்காவது வயதுக்குச் சில விசேஷங்கள் காணலாம். சரித்திர மாணவர்களிடம் இதை எடுத்துரைக்க அவசியமில்லை.

நமது கதாநாயகன் ஒரு சமையல்காரனாக இருந்தான். சொல்லத்தக்க அறிவு ஒன்றும் அவனுக்கு இருக்கவில்லை. எழுதவும் படிக்கவும் தெரியாது. சமையலறையே அவனுடைய உலகம். அதற்கு அப்பாற்பட்ட விஷயங்களைப் பற்றி ஒன்றும் கவலைப்படாதவன். எதற்காகக் கவலைப்பட வேண்டும்? நன்றாகச் சாப்பிட வேண்டும்; சுகமாக மூக்குப் பொடி போட வேண்டும்; உறங்க வேண்டும்; மீண்டும் எழுந்திருக்க வேண்டும்; வேலை செய்ய வேண்டும். இவைதான் அவனுடைய தினக்கடன்.



மாதங்களின் பெயர் அவனுக்குத் தெரியாது. சம்பளம் வாங்க வேண்டிய சமயம் வந்தால் அவனுடைய தாயார் வந்து சம்பளம் வாங்கிக் கொண்டு போவாள். மூக்குப் பொடி வேண்டுமென்றால் அந்தம்மாளே வாங்கிக் கொடுப்பாள். இப்படி மன நிறைவுடன் வாழும் அவனுக்கு இருபத்து நான்கு வயது பூர்த்தியாகிறது. அதோடு அதிசயம் நடக்கிறது !

வேறு விசேஷமொன்றுமில்லை. மூக்கு கொஞ்சம் நீளம் வந்திருக்கிறது: வாயைத் தாண்டித் தாடி வரை நீண்டு நிற்கிறது !

அப்படி அந்த மூக்கு நாள்தோறும் வளர ஆரம்பித்தது. மறைத்து வைக்க முடியுமோ? ஒரு மாதத்துக்குள் அது பொக்கிள் வரை நீண்டு விட்டது. ஆனால், ஏதாவது அசுகம் இருந்ததா? ஒன்றுமில்லை! சுவாசம் செய்யலாம். பொடி போடலாம். வாசனைகளை நுகர்ந்தறியலாம். சொல்லத்தக்க ஓர் அசௌகரியமும் இல்லை.

ஆனால், மூக்கு காரணமாக அந்த ஏழைச் சமையல்காரன் வேலையிலிருந்து விலக்கப்பட்டான்.

காரணம் என்ன?

''விலக்கப்பட்டவனைத் திருப்பி வேலைக்கு எடுத்துக் கொள்ள வேண்டும்'' என்று கூறிப் போராட்டம் நடத்த ஒரு சங்கமும் முன் வரவில்லை. இந்தக் கொடும் அநீதிக்கு முன் அரசியல் கட்சிக்காரர்களெல்லாம் கண் மூடிவிட்டார்கள்.

''அவரை எதற்காக விலக்கினார்கள்? ''மனிதாபிமானிகள் என்று கூறும் யாரும் இந்தக் கேள்வியைக் கேட்கவில்லை.

பாவம், சமையல்காரன்!

வேலை இழந்ததற்குக் காரணம் என்ன என்று யாரும் அவனுக்குச் சொல்லத் தேவைப்படவில்லை. வேலைக்கு வைத்திருந்த வீட்டுக்காரருக்கு நிம்மதி இல்லாமல் போனது தான் காரணம். மூக்கைப் பார்ப்பதற்கு, மூக்கைப் பார்ப்பதற்கு இராப் பகல் ஜனங்கள் வந்தார்கள். புகைப்படம் எடுப்பவர்கள் தொந்தரவு செய்தார்கள். பத்திரிகையாளர்கள் தொல்லை கொடுத்தார்கள்.

அந்த வீட்டிலிருந்து பல சாமான்கள் திருட்டுப் போயின.

இப்படி வேலையிழந்த அந்தச் சமையல்காரன் தனது ஏழைக் குடிசையில் பட்டினி கிடக்கும்போது ஒரு விஷயம் அவனுக்கு நன்றாகப் புரிந்தது. அவனும் அவனுடைய மூக்கும் மிகவும் பிரபலமடைந்திருக்கின்றனர்!

அயல்நாடுகளிலிருந்து அவனைப் பார்க்க ஆட்கள் வருகிறார்கள். நீண்டுபோன மூக்கைக் கண்டு ஆச்சரியப்பட்டு நிற்கிறார்கள். சிலர் தொட்



சாஹித்ய அகாதெமியின் கௌரவ அங்கத்தினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள வைக்கம் முகம்மது பஷீர் பிரசித்தி பெற்ற மலையாளக் கதாசிரியர். பிரபல அரசியல் தியாகி. பல ஆண்டுகள் இந்தியாவின் மூலை முடுக்கெல்லாம் சுற்றிப் பார்த்தவர். இருபத்திநான்கு நாவல்களும் எண்ணற்ற சிறு கதைகளும் எழுதியுள்ள பஷீரின் ''பால்ய கால சகி'' மலையாள இலக்கியத்தின் சிறப்புக்குச் சிறப்புச் சேர்ப்பது. கிண்டலும் நகைச் சுவையும் மிளிரும் 'உலகப் பிரசித்தி பெற்ற மூக்கு' ஜெர்மன் மொழியில் பிரசுரமாகும் பெருமை பெற்றுள்ளது. நம் தமிழ் வாசகர்களையும் மகிழ்விக்க கல்கியில் இடம் பெறுகிறது.





டுப் பார்க்கவும் செய்கிறார்கள். ஆனால், யாரும்.... எவரும், "நீங்கள் சாப்பிட வில்லையா?....ஏன் இவ்வளவு பலவீனம்?" என்று கேட்கவில்லை. ஒரு சிமிட்டிப் பொடி வாங்கக்கூட அந்த வீட்டில் பணமில்லை. பட்டினி போடப்பட்ட காட்சி மிருகமா அவன்? மடையனானாலும் அவன் மனிதன். அவன் தன் வயதான தாயாரைக் கூப்பிட்டு ரகசியமாகச் சொன்னான்:

"இந்தச் சனியன்களை விரட்டி வெளியேற்றிக் கதவடையுங்கள்!"

தாயார் சாமர்த்தியமாக எல்லோரையும் வெளியேற்றிக் கதவடைத்தாள்.

அன்று முதல் அவர்களுக்கு நல்ல காலம் பிறந்தது! அந்தம்மாளுக்கு லஞ்சம் கொடுத்துச் சிலர் மகனுடைய மூக்கைப் பார்க்க ஆரம்பித்தனர்! இந்த லஞ்ச ஊழலுக்கு எதிராகச் சில நியாயவாதிகள் குரல் எழுப்பினர். ஆனால், அரசாங்கம் இந்த விஷயத்தில் எந்த நடவடிக்கையும் எடுக்கவில்லை. அரசாங்கத்தின் உதாசீனத்தைக் கண்டித்து எதிர்ப்பாளர்கள் பலரும் அரசாங்கத்தின் எதிரிகளான பல உதிரிக் கட்சிகளில் சேர்ந்தார்கள்!

மூக்கனுடைய வருவாய் நாள்தோறும் பெருகியது. மிகைப்படுத்த வேண்டியதில்லை! எழுத்தறிவில்லாத அந்தச் சமையல்காரன் ஆறு வருடங்களில் லட்சப் பிரபுவானான்!

அவன் மூன்று தடவை சினிமாவில் நடித்தான். "தி ஹ்யூமன் லைட்ஹௌஸ்" என்ற டெக்னிக் கலர் படம் எவ்வளவு கோடி ரசிகர்களைக் கவர்ந்தது! ஆறு கவிஞர்கள் மூக்கனுடைய அருங்குணங்களைப் புகழ்ந்து போற்றி மகா காவியங்கள் இயற்றினர். ஒன்பது எழுத்தாளர்கள் மூக்கனுடைய வாழ்க்கை வரலாற்றை எழுதிச் செல்வமும் புகழும் பெற்றனர்.

அவனுடைய இருப்பிடம் ஏழைகளின் அடைக்கலமாகியது. எவருக்கும் அங்கு எப்போதும் உணவுண்டு; ஒரு சிமிட்டி மூக்குப் பொடியும்கூட.

அந்தக் காலத்தில் அவனுக்கு இரண்டு காரியதரிசிகள் இருந்தார்கள். இரண்டு அழகிகள்; படித்தவர்கள்.

இருவரும் மூக்கனைக் காதலிக்கிறார்கள். இருவரும் மூக்கனை மதிக்கிறார்கள்.

இரு அழகிகள் ஒரு மனிதனை ஏககாலத்தில் காதலிக்கும் போது சில்லறைத் தகராறுகள் ஏற்படலாம் அல்லவா? மூக்கனுடைய வாழ்க்கையிலும் அவ்வாறே ஏற்பட்டன.

அந்த இரு யுவதிகளைப் போல் பொது மக்கள் யாவரும் மூக்கனை விரும்புகிறார்கள். பொக்கிள் வரை நீண்டு கிடக்கும் அந்த மூக்கு புகழின் சின்னமாகத் திகழ்ந்தது.

உலகில் நடக்கும் முக்கிய சம்பவங்களைப் பற்றி மூக்கன் கருத்து அறிவிப்பான். பத்திரிகையாளர் அதைப் பிரசித்தப்படுத்துவர்.

"ஒரு மணி நேரத்தில் 10,000 மைல் வேகமுள்ள விமானம் செய்யப்பட்டிருக்கிறது! அதைப் பற்றி மூக்கன் கீழ்க்கண்டவாறு அபிப்பிராயம் தெரிவித்தார்....!"

"இறந்த மனிதனை டாக்டர் புந்துரோஸ் புராசிபுரோஸ் உயிர்ப்பித்தார். அதைப் பற்றி மூக்கன் கீழ்க்கண்டவாறு அபிப்பிராயம் தெரிவித்தார்....!"

உலகத்திலேயே உயர்ந்த சிகரத்தில் சிலர் ஏறினர் என்று அறிந்த போது மக்கள் கேட்டார்கள்:

"அதுபற்றி மூக்கன் என்ன சொன்னார்?"

மூக்கன் ஒன்றும் சொல்லவில்லையென்றால்... பூ! அந்தச் சம்பவம் முக்கியமில்லை. இப்படி ஓவியம், கடிகார வியாபாரம், மெஸ்மரிசம், போட்டோகிராபி, ஆன்மா, புத்தக வெளியீடு, நாவல் எழுதுவது, சாவுக்குப் பின் வாழ்வு, பத்திரிகை நடத்துவது, வேட்டையாடுதல் — என்று எல்லா விஷயங்களைப் பற்றியும் மூக்கன் கருத்துச் சொல்ல வேண்டும்!

இந்தச் சமயத்தில்தான் மூக்கனைக் கைப்பற்றப் பெரிய சதி வேலைகள் நடக்கின்றன. "கைப் பற்றுதல்" என்பது புதிய திட்டமொன்றுமல்ல. உலக சரித்திரத்தின் முக்கிய பகுதிகளெல்லாம் கைப்பற்றுதலின் கதையே.

"கைப் பற்றுதல்" என்பதுதான் என்ன?

நீங்கள் தரிசு நிலத்தில் தென்னம்பயிர் நடுகிறீர்கள். தண்ணீர் பாய்ச்சுகிறீர்கள். உரம் போடுகிறீர்கள். வேலி கட்டுகிறீர்கள். எதிர்பார்த்த வருஷங்கள் முடிந்து தென்னை மரங்கள் காய்க்கின்றன. குலைகுலையாய்த் தேங்காய்கள் நன்றாகத் தொங்குகின்றன. அப்போது உங்களிடமிருந்து அந்த இடத்தைக் கைப்பற்ற எவருக்கும் ஆசை பிறக்கும்!

முதன் முதலாக மூக்கனைக் கைப்பற்ற முயற்சி எடுத்தது அரசாங்கமே. அதொரு யுக்தியாக இருந்தது. "நாசிகப் பிரமுகன்" என்ற பட்டத்தோடு அரசாங்கம் மூக்கனுக்கு ஒரு பதக்கத்தையும் கொடுத்தது. ஜனாதிபதியே அந்த வைரம் கட்டிய தங்கப் பதக்கத்தை மூக்கனுடைய கழுத்தில் அணிவித்தார். பிறகு, கைக் குலுக்குவதற்குப் பதிலாக மூக்கனுடைய மூக்கின் நுனியைப் பிடித்து ஜனாதிபதி குலுக்கினார். இதன் செய்திப்படம் நாடெங்கும் சினிமாக் கொட்டகைகளில் வெளியிடப்பட்டது.

இதற்குள் அரசியல் கட்சிகள் உஷாராக முன்வந்தன. மக்களுடைய புரட்சிக்குத் தோழர் மூக்கன் தலைமை தாங்க வேண்டும்! தோழர் மூக்கனே! எவருடைய தோழர்? எதற்காகத் தோழர்? கடவுளே! பாவம் மூக்கன்!....மூக்கன் நம் கட்சியில் சேர வேண்டும்!

நம் கட்சி என்றால் எந்தக் கட்சியில்?

கட்சிகள் பல உண்டு. எல்லாவற்றிலும் ஒரே சமயத்தில் மூக்கன் எப்படிச் சேர முடியும்?

மூக்கன் சொன்னான்:

"நான் எதற்காகக் கட்சியில் சேர வேண்டும்? என்னால் அது முடியாது!"

இப்படி இருக்கும்போது, காரியதரிசிகளில் ஒருத்தி கூறினள்: "என்னிடம் விருப்பம் இருந்தால் தோழர் மூக்கன் என் கட்சியில் சேர வேண்டும்!"

மூக்கன் பேசவில்லை.

''நான் ஏதாவது கட்சியில் சேர வேண்டுமா ?'' மூக்கன் மற்ெறாரு காரியதரிசியிடம் கேட்டான். அவனுக்கு விஷயம் புரிந்து விட்டது. அவன் கூறினான்: ''எதற்காக?''

இதற்குள் ஒரு கட்சிக்காரர்கள் கோஷம் போட்டு வந்தனர் :

''நம்முடைய கட்சி மூக்கனுடைய கட்சி ! மூக்கனுடைய கட்சி மக்களின் கட்சி !''

இதைக் கேட்டு இதர கட்சிக்காரர்களுக்குக் கோபம் பொங்கியது. அவர்கள் மூக்கனுடைய ஒரு காரியதரிசியின் மூலம் மூக்கனுக்கு எதிராக ஒரு திடுக்கிடும் அறிக்கையை வெளியிட்டனர் :

''மூக்கன் மக்களை ஏமாற்றி விட்டான் ! இவ்வளவு காலம் மூக்கன் மக்களை ஏமாற்றிக் கொண்டிருந்தான். இந்தக் கொடிய வஞ்சனையில் என்னையும் ஒரு பங்காளியாக்கினான். நான் மக்களிடம் உண்மை கூறுகிறேன்; மூக்கனுடைய மூக்கு ரப்பர் மூக்கே.''

ஆ ! இந்தச் செய்தி உலகமெங்கும் பத்திரிகைகளில் பெரிய அளவில் பிரசுரிக்கப்பட்டது. மூக்கனுடைய மூக்கு ரப்பர் மூக்கு!

இதைக் கேட்டால் மக்கள் வியப்படையாமல் இருப்பரோ? எழுச்சி கொள்ளாமல் இருப்பரோ? உலகின் எல்லாப் பகுதிகளிலிருந்தும் தந்திகள், போன்கள், கடிதங்கள் ! ஜனாதிபதிக்கு இருப்புக் கொள்ளவில்லை.

''மக்களை ஏமாற்றிய ரப்பர் மூக்கன் ஒழிக! ரப்பர் மூக்கனின் கட்சி ஒழிக! புரட்சி ஓங்குக'' என்ற கோஷங்களை மூக்கனுடைய எதிர்க் கட்சிகள் எழுப்பின போது, அவன் கட்சிக்காரர்கள் மற்றொரு காரியதரிசியின் மூலம் வேறோர் அறிக்கையை வெளியிட்டனர்.

''அன்புமிக்க மக்களே ! அவன் கூறியது முற்றும் பொய். அவனைத் தோழர் மூக்கன் காதலிக்க வில்லை. அதனால் ஏற்பட்ட பொறாமையே. தோழர் மூக்கனுடைய செல்வத்தையும் புகழையும் கைப்பற்றவே அவன் முயன்றான். அவனுடைய தம்பிகளில் ஒருவன் எதிர்க்கட்சியில் இருக்கிறான். அந்தத் திருட்டுக் கட்சியின் உண்மை உருவத்தைக் காண்பிக்க நான் இந்தச் சந்தர்ப்பத்தை உபயோகித்துக் கொள்கிறேன். நான் தோழர் மூக்கனுடைய அந்தரங்கக் காரியதரிசி. எனக்கு நேர்முகமாகத் தெரியும். தோழருடைய மூக்கு ரப்பரல்ல. என்னுடைய இதயம் போல் உண்மையானது. பிரதிபலன் எதிர்பாராமல் இந்த இக்கட்டான நிலையில் தோழர் மூக்கனுடைய பின்னால் அணிவகுத்து நிற்கும் மக்கள் முன்னேற்றக் கட்சி ஜிந்தாபாத் ! தோழர் மூக்கன் ஜிந்தாபாத் ! தோழர் மூக்கனுடைய கட்சி மக்களின் முன்னேற்றக் கட்சி ! புரட்சி ஓங்குக !''

என்ன செய்வது ? மக்களுக்கெல்லாம் ஒரே குழப்பம். இதனிடையில் மூக்கனுடைய கட்சியின் எதிர்க்கட்சிக்காரர்கள் அரசாங்கத்தையும் ஜனாதிபதியையும் திட்டத் தொடங்கினார்கள் !

''மதியில்லா அரசாங்கம்! மக்களை வஞ்சித்த ரப்பர் மூக்குக் காரனுக்கு ' நாசிகப் பிரமுகன் ' என்று பட்டம் சூட்டிற்று. வைரம்




## மோதிரக் கையால் குட்டு!

அன்னிய மண்ணில் தம் கிரிக்கெட் திறமையினால் புகழ் பரப்பியவர்கள் ரஞ்ஜீதும் திலீப்புமாவர். திலீப் ஆட்டமென்றால் பிரிட்டிஷ் மக்களுக்கு ஒரே ஆசை. நிமிஷத்துக்கு ஒரு ரன் எடுத்து மகிழ்விப்பவர். திலீப் 1930ல் நார்த்தான்ஸ்-க்கு எதிராக 333 ரன்கள் ஒரே நாளில் ஆடி எடுத்ததில் அவர் ஆட்டத்தையே சில நாட்கள் விடும்படியாயிற்று; சுவிட்சர்லாந்தில் சிகிச்சைக்குச் செல்லும்படியாயிற்று. ஆட்டத் திறமை இருக்கிற அளவு அவர் உடல் ஒத்துழைக்கவில்லை.

திலீப்புக்கு மாமா ரஞ்ஜீத் என்றால் பெருமதிப்பு. டெஸ்ட் நண்பர் ஒருவர், ''திலீப், இன்று ரொம்ப நன்றாய் ஆடினாய். உன் மாமா ரஞ்ஜீத்தை விட வெளுத்து வாங்கிவிட்டாய்'' என்று பாராட்டினார். திலீப்புக்கு இதைக் கேட்டதும் தர்மசங்கடமாகப் போய்விட்டது.

''என் மாமாவின் ஆட்டத்துக்குக் கிட்டே நம்மால் நெருங்க முடியுமா? அது இமயம்'' என்றார் திலீப் பெருந்தன்மையுடன்.

ஒரு சமயம் ஆஸ்திரேலியக் கோஷ்டிக்கு எதிராக ஹோவில் திலீப் ஆடியபோது எல்லோரும் அதிசயப்படும்படியாக ஒரே ரன்னில் அவர் பெவிலியனுக்குத் திரும்பினார். உடை அறையில் வந்ததும் தம் காப்டனிடம் திலீப், ''காப்டன்! என் மாமா என்ன சொல்லப் போகிறாரோ தெரியவில்லை..'' என்று நடுங்கியபடியே கூறினார். அவர் நீண்ட நேரம் அதற்காகக் காத்திருக்க வேண்டியிருக்கவில்லை. சீக்கிரமே தந்திப் பையன் திலீபுக்கு ஒரு தந்தியும் காப்டனுக்கு ஒரு தந்தியும் கொடுத்துச் சென்றான்.

காப்டன் தந்தி உறையைப் பிரித்து உரக்கப் படித்தார். ''என் மருமகனிடம் சொல்லுங்கள், உடனே கிரிக்கெட்டுக்குத் தலைமுழுகிவிட்டு, பெண்மணி பெட்டி நட்டாலுடன் டென்னிஸ் ஆடப் போகச் சொல்லுங்கள்!''

அனைவரும் இதைக் கேட்டு விழுந்து விழுந்து சிரித்தார்கள்.

திலீப் துயரம் ததும்பிய முகத்துடன் தம் தோழர்களிடம் ''அது ஒன்றும் பிரமாதமில்லை. எனக்கு வந்திருக்கிற தந்தி அதைவிடக் கடுமையானது!'' என்றார்.

இப்படி மாமா ரஞ்ஜீத்தின் விமரிசனத்தாலும் பயிற்சியாலும் ஆங்கிலக் கிரிக்கெட்டில் உன்னத ஸ்தானத்தைப் பெற்றார் திலீப். குட்டுப்பட்டாலும் மோதிரக் கையால் குட்டுப்பட வேண்டும் என்ற வாக்குப் பொய்யாகுமா?

— குண்டுமணி

# சிதம்பர ரகசியம்

## நகைச் சுவைச் சித்திரத் தொடர்





**அடுத்த இதழில் ஆரம்பம்**

சூட்டிய தங்கப் பதக்கம் கொடுத்தது. இப்படி மக்களை வஞ்சித்ததில் ஜனாதிபதிக்கும் பங்கு உண்டு. இந்தப் பெரிய சதி வேலையில் ஒரு சூழ்ச்சி இருக்கிறது. ஜனாதிபதி ராஜிநாமா செய்ய வேண்டும்! மந்திரிசபை ராஜிநாமா செய்ய வேண்டும். ரப்பர் மூக்கனைக் கொல்ல வேண்டும்!''

இதைக் கேட்டு ஜனாதிபதி கோபமுற்றார். ஒரு நாள் காலையில் பட்டாளமும் டாங்கிகளும் மூக்கனுடைய வீட்டை முற்றுகையிட்டன. மூக்கனைக் கைது செய்துகொண்டுபோனார்கள்.

பிறகு அநேக நாட்களுக்கு மூக்கனைப் பற்றிய எந்தச் செய்தியும் இல்லை. மக்கள் மூக்கனை மறந்தனர். ஆனால், திடீரென்று வந்தது அணுகுண்டு! என்னவா? மக்கள் மறந்துவிட்ட போது, ஜனாதிபதியின் ஒரு சிறிய அறிவிப்பு வந்தது :

''மார்ச் 9ந் தேதி 'நாசிகப் பிரமுகர்' பற்றிப் பகிரங்க விசாரணை நடக்கும். 48 நாடுகளின் பிரதிநிதிகளாக வரும் கைதேர்ந்த டாக்டர்கள் மூக்கனைப் பரிசோதிப்பார்கள். உலகின் எல்லாப் பத்திரிகைகளின் பிரதிநிதிகளும் இருப்பார்கள். இந்த விசாரணையை எல்லா மக்களும் செய்திப் படமாகக் காண முடியும். மக்கள் அமைதியாக வருக.''

ஜனங்களா — அவர்கள் அமைதியாக வரவில்லை. அவர்கள் தலைநகரில் திரண்டுகூடினர். ஹோட்டல்களைத் தாக்கினர். வண்டிகளைத் தகர்த்தனர். போலீஸ் ஸ்டேஷன்களுக்குத் தீ வைத்தனர். அரசாங்கக் கட்டடங்கள் நாசமாக்கப்பட்டன. அநேக மதக் கலவரங்கள் நடந்தன. ஏகப்பட்ட பேர் இந்த மூக்கன் போராட்டத்தில் தியாகிகளானார்கள்.

மார்ச் 9 — பதினொரு மணியளவில் ஜனாதிபதியின் மாளிகைக்கு எதிரில் ஒரு மக்கள் சமுத்திரமே சூழ்மியிருந்தது. அப்போது ஒலிபரப்பிகள் முழங்கின.

''மக்கள் அமைதியாக இருக்க வேண்டும். பரிசோதனை ஆரம்பித்து விட்டது!''

ஜனாதிபதிக்கும், அநேக அமைச்சர்களுக்கும் முன்னிலையில், டாக்டர்கள் மூக்கனைச் சுற்றி நின்றனர். ஒரு டாக்டர் மூக்கனுடைய மூக்கின் வாயை அடைத்தார். அப்போது மூக்கன் வாயைத் திறந்தான். இன்னொரு டாக்டர் குண்டூசியால் மூக்கனின் மூக்கின் நுனியில் குத்தினார். அப்போது, அதிசயம் என்றுதான் கூற வேண்டும், மூக்கனின் மூக்கின் நுனியிலிருந்து ஒரு துளி ரத்தம் கசிந்தது.

''மூக்கு ரப்பரல்ல! இயற்கை!'' டாக்டர்கள் ஏகமனதாகத் தீர்ப்பு கூறினர்.

மூக்கனின் காரியதரிசிப் பெண் மூக்கனின் மூக்கின் நுனியை முத்தம் கொடுத்தாள்.

''தோழர் மூக்கன் ஜிந்தாபாத்! நாசிகப் பிரமுகன் ஜிந்தாபாத்! தோழர் மூக்கனின் மக்கள் முன்னேற்றக் கட்சி ஜிந்தாபாத்!''

இந்த ஆர்ப்பாட்டம் அடங்கியவுடன், ஜனாதிபதி இன்னொரு யுக்தி செய்தார்! மூக்கனைப் பார்லிமெண்டுக்கு நியமனம் செய்தார். இது இப்படி முடிந்தாலும், மூக்கன் கிடைக்காத கட்சிக்காரர்கள் ஒரு ஐக்கிய முன்னணியாகச் சொல்லிக் கொண்டு இருக்கிறார்கள்:

''மந்திரி சபை ராஜிநாமா செய்ய வேண்டும்! மக்களை ஏமாற்ற சதி! ரப்பர் மூக்கு!''

பொய்யின் போக்கைப் பார்த்தீர்களா? குழப்பம் ஏற்படாமல் இருக்குமா? பாமர மக்கள் என்ன செய்வார்கள்?

— தமிழாக்கம் : **ரா. ராதாகிருஷ்ணன்**

# ஹெலிகாப்டர்கள் கீழே இறங்கி விட்டன

இந்திரா பார்த்தசாரதி



## 4

நித்தியாவை அவள் வீட்டில் அமிர்தம் சந்தித்து விட்டு வந்த அன்றிரவுக்கும் இன்றிரவுக்கும் எவ்வளவு வித்தியாசம்! காலத்தையும் கனவுகளையும் இப்படிக் கரைப்பதற்குத் தான் வாழ்க்கை என்று பேரா? ஒரு வேளை அன்றிரவு தான் கண்ட கனவு நனவாகியிருந்தால், இன்றிரவு இங்கு வராந்தாவில் நின்றுகொண்டு கனவு காண வேண்டிய அவசியம் இல்லாமற் போயிருக்கும். நிகழ்ச்சி என்பது நினைவுக்குச் செய்யும் கொடுமை. கனவு கனவாயிருப்பதில் எவ்வளவு சுகம்! நேரே பார்ப்பதைவிட, பொருள்கள் வர்ணக் கண்ணாடியில் பார்க்கும்போது எவ்வளவு அழகாக இருக்கின்றன!

பன்னிரண்டு வருஷங்களாகத் தான் வாழ்ந்த வாழ்வு போலித்தனமானது... தன் சிந்தனையைத் தர்மமாகக் கொண்டு வாழாத கபட நாடகம். ஊராரை எதிர்த்துக் கொள்ளக் கூடாது, ஒட்டி வாழ வேண்டும் என்ற ஆட்டு மந்தை மனப்பான்மை... அமைதி என்ற வேஷத்தில், பொய்யுடன் சமரஸம் செய்து கொண்ட கையாலாகாத்தனம்.

தன் வாழ்க்கை இப்படியேதான் முடிவடைந்துவிட வேண்டுமா?

அப்பொழுது திலகத்தின் விசும்பல் அவனுக்குத் தெளிவாகக் கேட்டது. தான் அழ வேண்டும், திலகம் ஏன் அழுகிறாள்?

அவன் எதிரே விண் அளந்து நின்ற ஆஸ்பத்திரிக் கட்டடங்கள் மறைந்தன. அவன் இருளைத் தவிர வேறொன்றும் காணவில்லை. மனம் சூன்யமாயிற்று....

* * *

திலகம் தன்னைச் சுற்றி ஒரு மௌனச் சுவர் எழுப்பிக் கொண்டு விட்டாள். அமிர்தம் அதைத் தாண்டிச் செல்ல முற்படவில்லை. இப்படியே ஒரு வாரம் கழிந்து விட்டது.

அன்று இரண்டாவது சனிக்கிழமை. அகில இந்திய சித்திரப் பொருட்காட்சி ரவீந்திர பவனில் நடந்து கொண்டிருந்தது. அதைப் பார்க்கப்போகலாம் என்று நினைத்தான் அமிர்தம். திலகத்தையும் கூப்பிடலாமா? அவளுக்குச் சித்திரப் பொருட்காட்சிகளைக் காண வேண்டுமென்ற ஆர்வம் கிடையாது என்பது வாஸ்தவம்தான். ஆனால் தன்னைக் கூப்பிடாமல் அவன் போய்விட்டு வந்தான் என்று தெரிந்தால் இந்த மௌனம் நீடிக்கும் என்று சொல்ல முடியாது. அவனுக்கு அடுத்த இரண்டு நாட்களும் நரக வேதனைதான்.

திலகம் உணவு பரிமாறும்போது அவன் சொன்னான்: ''ஒரு ஆர்ட் எக்ஸிபிஷன் போகலாம்னு இருக்கேன்...''

அவள் பதில் பேசாமல் ஒரு கிண்ணத்தில் தயிரை எடுத்து வைத்தாள்.

''வருவதா யிருந்தால் வரலாம்...''

''நான் வரலே...''

நல்லவேளை, கேட்டு, வரவில்லை என்று சொல்லிவிட்டாள். அப்பொழுது அவன் மனத்தில் திடீரென்று ஓர் உற்சாகம் ஏற்பட்டது. அதே சமயத்தில் திலகத்திடம் அவனுக்கு ஓர் அனுதாப உணர்ச்சியும் உண்டாயிற்று.

சாப்பிட்டு முடித்தவுடன் அவன் 'எக்ஸிபிஷன்' காண்பதற்காகப் புறப்பட்டான்.

அவன் காரில் உட்கார்ந்ததும், மாடியிலிருந்து ஜன்னல் வழியாகத் திலகம் தன்னைப் பார்த்துக் கொண்டிருக்கிறாள் என்பதை அவன் உணர்ந்தான்.

தான் மறுபடியும் கூப்பிடுவேன் என்று அவள் எதிர்பார்க்கிறாளோ? அழைத்தால் வந்தாலும் வந்து விடுவாள்... அவள் பக்கம் அவன் திரும்பாமல் காரை ஓட்டிக் கொண்டு சென்றான்.

'அகில இந்திய' என்று போட்டிருந்தார்களே தவிர, பல இடங்களிலிருந்து ஓவியங்கள் வரவில்லை. கலை விஷயத்திலும் இந்தப் பொல்லாத அரசியல்... பல பிரபல சைத்திரீகர்கள் ஒத்துழைக்க மறுத்து விட்டார்கள். இந்த அகில இந்தியப் பொருட்காட்சிக்கு ஏற்பாடு செய்ததே அரசாங்கம்தான். ஆனால் அதன் தேர்வுக் குழுவில் இருந்த அங்கத்தினர்களுக்குத் தங்களுடைய ஓவியங்களை மதிப்பிடத் தகுதியில்லை என்பது பல சைத்திரீகர்களின் வாதம். பொருட்காட்சியில் ஒருசில படங்களைத் தவிர மற்றவை யெல்லாம் மிகவும் சராசரிதான்.

'பிரளயம்' என்ற படம் அருமையாக இருந்தது. நிறச் சேர்க்கை எதேச்சையாக நிகழ்ந்து விட்ட அற்புதம்போல் அமிர்தத்துக்குத் தோன்றிற்று. ஏனென்றால் அந்த ஓவியருடைய இன்னொரு படம் மிகவும் சாதாரணம். வண்ணங்களே உணர்ச்சிகளாய், கரு, உரு, வேறுபாடில்லாமல் அப்படியே நேரடியாக இதயத்தோடு உறவாடின. 'பிரளயம்' நிகழ்வதைப் பௌதிகரீதியாக உணர்வது போன்ற மயக்கம். அவன் மெய் சிலிர்த்து நின்றான்.

இதை வரைந்த சைத்திரீகர் பிரபல ஓவியர் அல்லர். ஆனால் அவர் உள் மனத்திலும் தன் மனத்தில் இப்போது நிகழ்வதைப் போல் பெரிய பிரளயம் நிகழ்ந்திருக்க வேண்டும்.

''நமஸ்காரம்...''

அவன் திரும்பிப் பார்த்தான். பானு! தாழம்பூ உடம்பை அணைத்த இரத்தச் சிவப்பு, 'ட்ரெலான்'. கறுப்பு நிறச் சோளி. அவள் புன்சிரிப்பில் கண்களும் பங்கு கொண்டன.

'' பிரமித்துப் போய் நிற்கிறேன்...'' என்றான் அமிர்தம்.

''ஏன்?''

அவசரத்தில், உணர்ச்சி மயமாக நின்ற நிலையில் ஏதோ சொல்லி விட்டோம் என்று அவனுக்குப் பட்டது. அதற்குமேல் அதை அவன் விளக்கத் தயாராக இல்லை.

''இது ரொம்பப் பிரமாதமான படம்'' என்று சொல்லி விட்டுப் 'பிரளய'த்தைப் பார்த்துக் கொண்டே நின்றான் அமிர்தம்.

''இது நல்லாயிருக்கு!''

''என்ன இப்படிச் சாதாரணமாகச் சொல்லறே?''

''எளிமையாச் சொன்னாத்தான் நன்னாச் சொல்றதா அர்த்தம். பாக்கியெல்லாம் வெறும் சொல் விரயம்தான்.''

அமிர்தம் அவளைப் பார்த்துப் புன்னகை செய்தான். ''உண்மையான விமர்சன பாவனையோடதான் பேசறே நீ....''

''நோ. ப்ளீஸ்... நான் 'கிரிட்டிக்' இல்லே!''

''நான் உன்னைத் திட்டலே. மறுக்க வேண்டாம்!''

பானு சிரித்தாள். சிரிக்கும்போது அவள் கன்னங்கள் குழிவடைந்தன.

''எக்ஸிபிஷன் எப்படி இருக்கு?'' என்று கேட்டாள் பானு.

''எல்லா அரசாங்கக் காரியங்களையும் போலத்தான். ஏனோதானோவென்று...''

''நீங்களும் அரசாங்கத்தைச் சேர்ந்தவர்தானே?''

''எப்படித் தெரியும்?''

''சித்வாய் நகரிலே இருக்கீங்கன்னு, அதுவே சர்க்கார் துறை ஆசாமி என்பதை வெளிச்சம் போட்டுக் காட்டிடுமே...''



தன்னைப் பற்றி அவள் விசாரித்திருப்பாளோ என்று நினைத்த அமிர்தத்துக்கு ஓரளவு ஏமாற்றமாக இருந்தது. அவன் மௌனமாக இருப்பதைக் கண்ட பானு சொன்னாள்: "நான் உங்களைத் திட்டலே..."

அமிர்தம் சிரித்தான்.

இருவரும் ரவீந்திர பவனை விட்டு வெளியே வந்தனர்.

"வீட்டுக்குத்தானே?" என்றான் அமிர்தம்.

"ஆமாம்... நன்றி!" என்று அவனுடைய அடுத்த கேள்விக்கும் சேர்த்துப் பதில் சொல்லி விட்டாள் பானு.

காரில் உட்கார்ந்ததும் பானு கூறினாள்: "நானும் கொஞ்சம் பெயின்ட் பண்ணுவேன். ஆயில் பெயிண்டிங்!"

"அப்படியா? நான் அவற்றைப் பார்க்க ஆசைப்படறேன்!"

"அதிகமில்லே. ஏதோ கொஞ்சம்... நீங்க செய்யறதுண்டா?"

"இல்லே! நான் வெறும் ரஸிகன் தான்.... நீ எந்த ஸ்கூல்?"

"ஸ்கூலுமில்லே ஒண்ணுமில்லே. மனசுக்குத் தோணினபடி...."

"அப்படீன்னா உனக்கு முழு சுதந்திரம்தான். ஒரு கொள்கையிலே புகுந்துக்கிறது, ஒரு பந்தத்திலே மாட்டிக்கிட்டு முழிக்கிற மாதிரி..."

"மாமி சௌக்கியமா?" என்று கேட்டாள் பானு. எதற்காக இந்தக் கேள்வி கேட்கிறாள்?

ஃபிரோஷ்ஷா ரோடு வழியே கார் போய்க் கொண்டிருந்தது. கர்ஸன் ரோட் அதைச் சந்திக்கும் இடத்தில் வேகமாக வந்து கொண்டிருந்த ஒரு 'பட் — பட்டி' கார் மீது மோதத் தெரிந்தது.

காரை மிகவும் சாமர்த்தியமாகச் சமாளித்து நிறுத்தினான் அமிர்தம்.

"நீ வர்ற போதெல்லாம் ஏதாவது விபத்து ஆகும் போலிருக்குதே!" என்று சிரித்துக் கொண்டே சொன்னான் அமிர்தம்.

"உங்களுடைய அளவு கடந்த உற்சாகம் இதுக்குக் காரணமா யிருக்காதுன்னு நினைக்கிறேன்..." என்றாள் பானு.

அன்று திலகம் சொன்னதை அவள் இன்னும் மறக்கவில்லை என்று அவனுக்குப் புரிந்தது.

"உனக்கு நல்ல ஞாபக சக்தி இருக்குது...."

"அது ஒண்ணுதான் வாழ்க்கையைச் சுவாரசியமாக்குகிற விஷயம்..."

எவ்வளவு வாஸ்தவமானது! நித்யாவும் இவளைப் போலத்தான் பொறிப் பொறிகளாகப் பேசுவாள்! அவளை முதல் சந்திப்புக்குப் பிறகு ஒரு வாரம் கழித்துத்தான் சந்தித்தான். 'ஐஸ்கிரீம் பார்லரில்' ஏதோ சாப்பிட்டுக்கொண்டு கை நிறையப் புது வருஷ வாழ்த்துக் களுடன் நின்று கொண்டிருந்தாள்.

"ஹலோ!"

"கம் ஆன்... நீங்களும் சாப்பிடுங்க.. உன் கா பி தேதோ...."

"தாங்க்யூ... உங்க 'வெயிட்'டைப் பற்றி நீங்க கவலைப்படறதில்லையா?"

"நான் ரொம்ப ஒல்லியா இருக்கிறதாக ஒரு நினைப்பு. 'வெயிட்' ஏறுமான்னுதான் இப்படிச் சாப்பிடறேன்."

"அப்ப இன்னொன்று சாப்பிடுங்கோ!"

"ஒகே."

தயங்காமல் அவள் ஒப்புக் கொண்டது அவனுக்கு ஆச்சரியமாக இருந்தது.

"உங்களுக்கு நிறைய 'ஃபிரண்ட்ஸ்' போலிருக்கு..." என்றான் அமிர்தம், அவள் கையில் வைத்துக் கொண்டிருந்த வாழ்த்துக்களைப் பார்த்தவாறு.

"ஆமாம்! உங்களுக்கும் ஒண்ணு வரும்..."

"நன்றி! அப்படின்னா நானும் ஒண்ணு வாங்கியாகணும் இந்த வருஷம்!"

"அப்படின்னா உங்களுக்கு ஒரே ஒரு ஃபிரெண்டுதான்னு அர்த்தமா?"

"ஆமாம்" என்பதற்காக அவன் தலையை அசைத்தான்.

"அதைப் பத்திப் பெருமைப்படற மாதிரி தலையை ஆட்டறீங்களே?"

"எதைப்பத்தி? — ஒரே 'ஃபிரெண்ட்' என்கிறதைப் பத்தியா?"

அவள் அதற்குப் பதில் சொல்லவில்லை. திடீரென்று மௌனமானாள். கொஞ்சம் அதிகமாகவே பேசி விட்டோமோ என்று அவனுக்குத் தோன்றியது.

"ஐ லைக் யுவர் மதர்..." என்று தான் பேசியதற்கு ஈடு செய்வது போல் அவன் கூறினான்.

"அம்மாவுக்கும் உங்களைப் பத்தி நல்ல அபிப்பிராயம்தான்."

அந்த நல்ல அபிப்பிராயத்தைத் தான் காப்பாற்றிக் கொள்ள வேண்டும் என்பதற்காக இதைச்சொன்னாளா? அல்லது... அல்லது... அதைப் பற்றி நினைக்கும் போது அவன் மனம் சந்தோஷத்தால் பூரித்தது.

"உங்களுக்குச் சிநேகிதர்கள் கிடையாதுன்னு அன்னிக்கே எனக்குத் தெரியும்..."

"என்னிக்கு?"

"சினிமாவிலே பார்த்த அன்னிக்கு.. உங்க வயசிலே வேறே யாரு தனியா சினிமாவுக்குப் போவா?"

# மயக்கும் மோகனக் கண்கள்

காண்போரைக் கிறங்கவைக்கும்
கவர்ச்சிமிக்க கண்கள்!
அதை அவளும் அறிவாள்.
தன் அழகான கண்களை
மேலும் அழகாகவும் துடிப்பாகவும்
தோன்றச் செய்கிறது சிங்கார்
காஜல் கண்மை என்பது
அவளுக்குத் தெரியும். அவன்
அழகுமிகு அருமையான
உணர்வையும் பெறுகிறான்!
சிங்கார் அவள் கண்களுக்கு அளிக்கும்
பிரமாதமான குளுமை கண்களின்
சோர்வையெல்லாம்போக்கிவிடுகிறது.




தூய பசு நெய்யிலிருந்து
செய்யப்பட்டது.




## கண்மை

அழகான கண்களுக்கும்,
சிறந்த பார்வைக்கும்.

Advertu: PP-8A,

விண்வெளியில் நிகழ்ந்த ஒரு விநோத சம்பவம் பற்றிய செய்தி இப்போது வெளியாகியிருக்கிறது. நிக்கோலேவ், செவஸ்டயனேவ் இருவரும் சூயெஸ்-9 விண்வெளிக் கப்பலில் உலகைச் சுற்றியபடியே, ஒரு 'செஸ்' போர்டை வைத்துக் கொண்டு வெள்ளைக் காய்களை நகர்த்தினார்கள். கீழே பூமியில், ஆனா அலுவலகத்தில் ஒரு ராணுவ வீரரும் மற்றொரு விண்வெளி வீரரும் கறுப்புக் காய்களை நகர்த்தினார்கள். விண்வெளிக்கும் பூமிக்கும் இடையே செய்தித் தொடர்பு மூலம் நடந்த இவ்விளையாட்டு ஆறு மணி நேரத்துக்குப் பின் வெற்றி தோல்வி இல்லாமல் முடிந்தது.

விண்வெளியில் நிகழ்ந்த முதல் விளையாட்டு இதுதான்.

—ஏ. சண்முகசுந்தரம்.

ஆதாரம்: சோவியத்ஸ்கி ஸ்போர்ட்.

''நீங்களும் தனியாகத்தானே வந்திங்க. அதுக்கு என்ன அர்த்தம்?''

''கல்யாணமாகாத ஆம்பிள்ளை தனியாப் போறதும், கல்யாணமாகாத பொண்ணு இன்னொருத்தரோட போறதும் என்னு யோசிக்க வேண்டிய விஷயங்கள்...''

''ஆஸ்கார்வொயில்ட் மாதிரி பேசறீங்களே...''

''இது பாராட்டுன்னு நினைக்கிறேன்.''

இருவரும் பேசிக் கொண்டே வீடு போய்ச் சேர்ந்தார்கள். ''நீங்க என் சிறு குடிலை வந்து பாருங்களேன்....'' என்று அழைத்தான் அமிர்தம்.

''இருங்க...அம்மா கிட்டே சொல்லிட்டு வந்துடறேன்'' என்று மாடிக்குப் போனாள் நித்யா.

சிறிது நேரம் கழித்து வந்தாள். அவள் உடை மாற்றிக் கொண்டிருப்பதைக் கவனிக்க அவன் தவறவில்லை.

அவனுடைய புஸ்தக அலமாரியருகே நின்று கொண்டு அவனுடைய நூல் நிலயத்தை ஆராயத் தொடங்கினாள். அவன் பக்கத்தில் நின்றான். அவள் சூடியிருந்த நித்ய மல்லிகை தன் மணத்தால் அவன் இதயத்தை நிறைத்தது.

அவன், அவள் சற்று உயரத்தில் இருந்த புஸ்தகத்தை எடுக்க முயலும் போது அவள் மேல் உராய்ந்து கொண்டு புஸ்தகத்தை எடுத்துக் கொடுத்தான்.

புஸ்தகத்தைப் புரட்டிப் பார்த்து விட்டு, ''அங்கேயே வைச்சுடுங்கோ!'' என்றாள் அவள். அவன் மறுபடியும் அவள் மீது உராய்ந்தான். அது எதேச்சையல்ல என்று அவளுக்கு நிச்சயம் தெரிந்திருக்க வேண்டும். அப்படியும் அவள் மௌனமாக நின்றாள்.

மௌனத்தின் அர்த்தத்தை அமிர்தம் அன்றுதான் புரிந்து கொண்டான்.

நித்யா அரை மணி நேரத்துக்குப் பிறகு அவனிடம் விடைபெற்றுக் கொண்டாள். மாடியில் அவள் அம்மா வெகுநேரம் இல்லை என்று அவனுக்குப் பிறகுதான் தெரிந்தது. அதுவும் நித்யா வேறொரு சமயத்தில் சொன்னாள்....

''டிரைவிங் செய்யற போது பேசற வழக்கம் இல்லியோ?'' என்று கேட்டாள் பானு.

''இல்லே... நீ இப்போ சொன்னியே ஞாபக சக்தி ஒண்ணுதான் 'சுவாரசியமான விஷயம்'னு அதைப்பற்றி யோசிச்சுக்கிட்டிருந்தேன்...''

''யோசிக்கிறதுக்கு நிறைய விஷயங்கள் இருக்கு போலிருக்கு..''

''ஆமாம்! ஏராளமாய் இருக்கு!...''

பானு அவனை ஒரு தடவை பார்த்து விட்டுப் பிறகு பேசாமல் இருந்தாள். சிறிது நேரம் சென்ற பிறகு அமிர்தம் சொன்னான்: ''நான் என்ன யோசிச்சுக்கிட்டிருந்திருப்பேன்னு, நீ யோசிச்சுக்கிட்டு இருக்கியா?''

பானு பதில் கூறவில்லை. சிரித்தாள். கொஞ்ச நேரத்துக்குப் பிறகு கேட்டாள்: ''ஆமாம்... அன்னிக்கு நீங்கள் பதில் சொல்லலியே அந்தக் கேள்விக்கு.இப்போ பதில்சொல்லமுடியுமா?''

''என்ன கேள்வி?''

''எங்கம்மா நாடகத்திலே நடிப்பான்னு யாரு சொன்னா...?''

''கேசவன்னு ஒரு நண்பர் சொன்னாரு... 'அம்மாவும் பொண்ணுமாச் சேர்ந்து எங்க தியேட்டர் குருப்புக்கு ஒரு நட்சத்திர மதிப்பு'ன்னாரு.''

''நட்சத்திர மதிப்பா? நன்னா கிண்டல் பண்றீங்க'' அவள் கூந்தலை முன்புறம் தள்ளி நுனி முடிச்சில் இருந்த ரிப்பனைச் சரிவர முடிந்தாள். குரலில் கண்ட அலட்சிய பாவம் அவன் கூற்றைப் பரிவுடன் தடவிக் கொடுப்பது போலிருந்தது.

''நீபெரிய 'வெர்ஸடைல் ஆர்டிஸ்ட்'. பலதரப்பட்ட கலைகளில் உனக்குப் பரிச்சயம் உண்டு போலிருக்கே? நடிப்பு பெயிண்டிங்... டான்ஸ் தெரியுமா?''

''அதுவும் கொஞ்சம்... எங்கம்மா ஒரு காலத்திலே நன்னா ஆடுவாளாம். மெட்ராஸிலே அந்தக் காலத்திலே ஆடியிருக்கா.''

''உங்களுக்குச் சொந்த ஊரே மெட்ராஸ்தானா?''

''இல்லே... திருவாரூர். எங்கப்பா அங்கே பள்ளிக்கூட வாத்தியாரா இருந்தார்.''

''உங்கப்பா அப்புறம் மெட்ராஸுக்கு வந்துட்டாரா?''

''அது கிடக்கட்டும். நான் இப்போ என்ன செய்யறேன்னு கேட்காமே, பழசையே கேட்டுண்டிருக்கீங்களே!''

தான் கேட்ட கேள்விக்கு அவள் பதில் சொல்ல விரும்ப வில்லை என்று அவனுக்குப் புரிந்தது. (தொடரும்)



## கௌரி - ராமநாராயணன் திருமணம்

ஸ்ரீ 'கல்கி' கிருஷ்ணமூர்த்தி அவர்களின் பேத்தியும், ஸ்ரீ என். ராமச்சந்திரன்-ஸ்ரீமதி ஆனந்தி ராமச்சந்திரன் ஆகியோரது புத்திரியுமான சௌபாக்கியவதி **கௌரிக்கும்,** பாங்க் ஆஃப் இந்தியாவில் டெவலப்மெண்ட் ஆபீஸராகப் பணியாற்றும் ஸ்ரீ பி. என். வெங்கடராமன் அவர்களின் புதல்வர் **ஸ்ரீ ராமநாராயணனுக்கும்** அண்மையில் கல்கி காரியாலயப் பூங்காவில் விமரிசையாகத் திருமணம் நடந்தேறியது.

கல்கி நேயர்களின் நல்லாசிகளைக் கோருகிறோம். வாழ்க மணமக்கள்!






[பிரபல எழுத்தாளர் திரு கு. அழகிரிசாமி இம்மாதம் 5ந் தேதி காலமானார். மீளாத் துயரில் ஆழ்ந்துள்ள அவரது மனைவி மக்களுக்கு நமது ஆழ்ந்த அனுதாபங்களைத் தெரிவித்துக் கொள்கிறோம். ஆசிரியர்]

நண்பர் கு. அழகிரிசாமியிடம் நான் பேசிப் பழகிய காலம் சுமார் பத்து மணி நேரம் இருக்கலாம். ஆனால் பத்து வருஷங்கள் நெருங்கிப் பழகிய நண்பரைக் காட்டிலும் அதிகமாக அந்தப் பத்து மணி நேரத்தில் என்னைக் கவர்ந்தவர் அவர் என்பதே அவரது சிறப்புக்கு ஓர் எடுத்துக்காட்டு.

முதன் முதலாக அவரை நான் சந்தித்தது, கல்கி வெள்ளிவிழாச் சிறுகதைப் போட்டிக்குப் பஞ்சாயத்தார்களில் ஒருவராய் அவர் இருக்க முடியுமா என்று கேட்டறிந்து வர அவரது இல்லத்துக்குச் சென்றிருந்தபோது. அந்த முதல் சந்திப்பின் தொடர்பாக ஏற்பட்ட அநுபவம் எனக்கு அவரிடம் அலாதியான ஒரு மதிப்பையும் ஈடுபாட்டையும் உண்டாக்கி விட்டது.

சாதாரணமாகச் சிறுகதைப் போட்டிகளில் நீதிபதிகளாக இருப்பவர்கள் கதைகளைப் படித்துவிட்டு மதிப்பெண்களைப் போட்டு வைத்துக் கொள்வார்கள். அல்லது 'ஏ', 'பி', 'ஸி' என்று தரவாரியாகக் குறிப்பிட்டுக் கொள்வார்கள். என்ன கதை என்று மறந்து போகாமலிருக்க நாலு வரிகளில் கதைக் கருத்தை எழுதி வைத்துக் கொள்வோரும் உண்டு.

ஆனால் அழகிரிசாமி அழகானதோர் அட்டவணையே தயாரித்து விட்டார். கதைக் கருவுக்கு இத்தனை மதிப்பெண்கள், கதாபாத்திரங்களின் குண இயல்புகளை வெளிப்படுத்தியுள்ள திறனுக்கு இத்தனை மதிப்பெண்கள், எழுத்து நடைக்கு இத்தனை, சிறுகதையாக அமைத்துத் தரும் உத்திக்கு இவ்வளவு, சம்பாஷணைகளின் சிறப்புக்கு இவ்வளவு என்று தனித்தனியே மதிப்பெண்கள் போட்டு மொத்தம் இத்தனை என்று கூட்டியும் வைத்திருந்தார். ஒவ்வொரு சிறுகதையையும் இத்தனை நுணுக்கமாக ஆராய்ந்து அவர் எடை போட்டு வைத்திருந்தது என்னை மலைக்கச் செய்தது. 'செய்வன திருந்தச் செய்' என்ற வாசகத்துக்கு உதாரண புருஷர் திரு கு. அழகிரிசாமி.

இத்தனைக்கும் பிறகு அவரது கருத்தில் மிகச் சிறந்த சிறுகதை என்று தோன்றியதற்கும் திரு பி. எஸ். ராமையாவின் முடிவுக்கும் வித்தியாசம் இருந்தது. மற்ற நீதிபதிகள் ராமையாவை ஆதரித்தனர். அழகிரிசாமி பிடிவாதமாக வாதாடினார். ராமையாவும் விட்டாரில்லை. கடைசியில் ராமையா கேட்டார்: "இரண்டு கதைகளையும் உரக்கப் படித்துப் பார்த்து விடுவோமா?"

அரை மணி நேரம் ராமையாவைப் படிக்க வைத்தார் அழகிரிசாமி. உன்னிப்பாகக் கேட்டார். தமது கருத்தை மாற்றிக் கொள்ளவும் செய்தார். அவரது பெருந்தன்மை அப்போது தெரிந்தது.

நெடிதுயர்ந்த தோற்றம், நிமிர்ந்த நடை, அலட்சியப் பார்வை, தீட்சண்யமான கண்கள், கலகலப்பான பேச்சு, அடிக்கொரு தடவை வெற்றிலைக் காவி தெரியச் சிரிக்கும் முகம் — அழகிரிசாமியின் இந்தக் கோலத்தைக் காணும் எவரும் அவரைக் குறைந்த பட்சம் ஒரு லட்சாதிபதியாகத்தான் மதிப்பிடுவார்கள். வாழ்க்கையில் அவர் கஷ்டப்பட்டதை யெல்லாம் வழுக்கைத்தலை ஒன்று தான் காட்டிக் கொடுக்கும், ஆனால் அவர் மிக உயரமாக இருந்ததால் அதுவும் பலரால் கவனிக்கப்படாமலே போகும்! துன்பத்தை உள்ளடக்கி, வாழ்க்கையை, 'உனக்காச்சு எனக்காச்சு; பார்க்கலாம் ஒரு கை!' என்ற ரீதியில் அணுகும் அரிய இயல்பு படைத்தவர் நண்பர் கு. அ.



வெள்ளி விழாச் சிறுகதைப் போட்டி நீதிபதிகள் போட்டிக் கதைகளைப் பற்றிச் சர்ச்சை நடத்துகிறார்கள்.

நடுநாயகமாக வீற்றிருப்பவர் திரு கு. அழகிரிசாமி

கல்கி காரியாலயத்துக்கு அவர் வந்திருந்த போது ஒரு சமயம் பேச்சுவாக்கில், ''நீங்கள் ஏன் (குறிப்பிட்ட பத்திரிகையின் பெயரைச் சொல்லி) அந்தப் பத்திரிகையை விட்டு வந்து விட்டீர்கள் ?'' என்று கேட்டேன்.

'' உண்மையைச் சொன்னால் நம்புவது கஷ்டமாக இருக்கும். நான் நன்றாக வேலை செய்தேன்; பொறுப்புடன் வேலை பார்த்தேன். அதனால் வந்தது ஆபத்து! மேலே மேலே எல்லாக் காரியங்களையும் என் மீதே சுமத்தினார்கள்; எல்லாம் அழகிரிசாமி பார்த்துக் கொள்வான் என்று சொல்லிவிட்டு மற்றவர்கள் கம்பி நீட்டினார்கள். என்னால் இதைப் பொறுக்க முடியவில்லை. கால் கடுதாசு எழுதிக் கொடுத்துவிட்டு வந்து விட்டேன்'' என்றார்.

இது நூற்றுக்கு நூறு உண்மையாகத்தான் இருக்க வேண்டும் என்பதில் எனக்குச் சந்தேகமே இருக்கவில்லை. வெள்ளி விழாப் போட்டி அநுபவம் அப்படிச் சந்தேகிக்க இடம் வைக்கவில்லை.

''ஆறு மாதங்கள் வருகிற மாதிரி கல்கிக்கு ஒரு தொடர்கதை எழுதுங்களேன்'' என்றேன்.

''தொடர்கதை என்றாலே எனக்கு அலர்ஜி'' என்றார் அவர்.

எனக்குத் திகைப்பாகி விட்டது. ஜாதகக் கட்டுத் தூக்கும் கல்யாணத் தரகர் போல் 'அது இல்லாவிட்டால் இது' என்று எடுத்துக் காட்ட வசதியாக ஏழெட்டு 'ஐடியா'க்களுடன் ஸ்டுடியோக்களையும் பத்திரிகைஆபிசுகளையும் முற்றுகையிடும் எழுத்தாளர்கள் உள்ள இந்த நாளில் இப்படியும் ஒருவரா ?

''என்ன அப்படிச் சொல்லி விட்டீர்கள்?'' என்றேன்.

கு. அ. சொன்னார்:

''ஒரு பத்திரிகையில் தொடர்கதை எழுதிக் கொண்டிருந்தேன். அவர்கள் உங்களைப் போல் இத்தனை மாதம் வரவேண்டும் என்றெல்லாம் முன்கூட்டியே ஏதும் கூறவில்லை. நான்பாட்டுக்கு எழுதிக் கொண்டே போனேன். திடீரென்று ஒரு நாள் உதவி ஆசிரியர் ஒருவர் வந்து, 'ஏன் சார்! உங்கள் கதை எப்போது முடியும்?' என்று கேட்டார். நாலைந்து நாட்கள் கழித்து அவரே மீண்டும், 'சீக்கிரம் முடித்து விட்டால் தேவலை' என்றார். மேலும் ஒரு வாரம் சென்றதும், 'இன்னும் நாலைந்து வாரங்களில் முடிந்து விடுமா ?' என்றார்.

'' 'அதெப்படி ஐயா முடியும் ? கதை முடிகிற போதுதான் முடியும். உமக்காகவோ எனக்காகவோ அல்பாயுசில் முடிந்து விடுமா ?' என்றேன்.

''அப்புறம் அவர்கள் ரொம்ப வற்புறுத்திய பின்பேரில் கதைச் சுருக்கம் எழுதிக்கொடுத்து விட்டு வந்து விட்டேன். அதையே போட்டு 'முற்றும்' என்று முத்தாய்ப்பும் வைத்து விட்டார்கள்'' என்றார் அழகிரிசாமி.

''எந்தக் கதை அது? புத்தகமாக வந்திருக்கிறதா ?'' என்றேன்.

''அதெப்படி வரும்? புத்தகப் பிரசுரகர்த்தர்கள் கேட்டார்கள். 'அட்வான்ஸ்' தரேன் என்றார்கள். நான் ஒப்புக் கொள்ளவில்லை.''

''ஏன்?'' — வியப்புடன் கேட்டேன் நான். அவருக்கு இருந்த பணத் தட்டுப்பாடு எனக்குத் தெரியுமாதலால் வியப்பு.

'' 'கடைசி ஐந்தாறு அத்தியாயங்களைக் கதைச் சுருக்கமாய் இராமல் விரிவாக எழுத வேண்டும்; எழுதிய பிறகுதான் புத்தகமாகப் போடலாம்' என்று கூறிவிட்டேன். அதை எழுத இன்னும் வேளை வரவில்லை.''

அழகிரிசாமி பத்திரிகைகளுக்காகவோ, புத்தகங்களுக்காகவோ, பணத்துக்காகவோ இன்றித் தமது மனத்துக்காகவும் இலக்கிய ரசனைக்காகவும் எழுத விரும்பினார். அப்படிப் பட்ட ஓர் எழுத்தைப் பரவலாக ஏற்கும் காலம் தமிழகத்தில் இன்னும் வரவில்லையே ?

'தீராத விளையாட்டு' என்ற தொடர்கதை வைக்கூட ''ஆறு மாதங்கள் வருவதுபோல் திட்டமிட்டுக் கொள்ளுங்கள்'' என்று முன் கூட்டியே சொல்லியிருந்தும் அவரால் தமது எழுத்தை ஒரு காலக் கெடுவுக்குள் அடக்க முடியவில்லை. எழுத்தைச் சிறைப்படுத்தியது போன்று ஒரு வேதனையை அவர் அனுபவித்தார். ஆறு மாதக் கெடுவை ஏழு மாதமாக்கியும் அதிகப்படியாகச் சில பக்கங்களை ஒதுக்கியும்கூட அவருக்கு முழுத் திருப்தி ஏற்படவில்லை என்பது எனக்குத் தெரியும்.

கல்கி சந்தாதாரர்களுக்கு இலவசமாக ஒரு புத்தகம் வழங்குவது என்ற திட்டத்தின் அடிப்படையில் 'பிரபல நட்சத்திரம்' என்ற சிறுகதைத் தொகுப்பு நூல் உருவாகியது. அதற்குக் ''கல்கியில் வெளிவந்துள்ள தங்களது சிறந்த கதையொன்றைத் தேர்ந்தெடுத்துத் தாருங்கள்'' என்று கேட்டேன். அவர் பொறுக்கி எடுத்த கதை இப்படி ஆரம்பமாகிறது:

> **குமாரபுரம் என்பது ஒரு காட்டு ஸ்டேஷன். அரை மைல் சுற்றளவுக்கு எந்த ஊரும் கிடையாது. ஆனால் ஸ்டேஷன் என்று வைத்துவிட்டால் பெயர் வைக்காமல் முடியுமா ? இடுகுறிப் பெயரையாவது வைத்துவிடத்தானே வேண்டும்? அந்தக் கணக்கில் தான் குமாரபுரம் என்ற பெயரை வைத்திருக்கிறார்களே ஒழிய, மற்றபடி கிழக்கே ஒரு மைலுக்கப்பால் உள்ள குமாரபுரம் கிராமம் முக்கால் நூற்றாண்டாக - ஸ்டேஷனைப் பகிஷ்காரம் செய்து கொண்டுதான் இருக்கிறது !**

எடுத்த எடுப்பிலேயே அருவருப்பான விஷயங்களைச் சொல்லி வாசகர்களைத் திடுக்கிட வைக்கவோ அல்லது அவர்களின் பலவீனங்களைப் பயன்படுத்தி விழி பிதுங்க வைக்கவோ எழுத்தாளர்கள் முயலும் இந்நாளில், அழகிரிசாமியின் தனி நோக்கு மிக எளிய சூழல்களிலே நிலைத்தது. அவர், பெருக்கெடுத்தோடும் வெள்ளத்திடமும் போகவில்லை, குழம்பிக் கிடக்கும் சேற்றுக் குட்டையிடமும் நெருங்கவில்லை. சலசலத்துப் பாயும் தெளிந்த நீரோடையை அணுகினார். மிகச் சாதாரணமாக நமக்குத் தோன்றும் விஷயங்களில் அவர் வாழ்க்கையின் விசித்திர அழகுகளைக் கண்டார். அவ்வழகுகளை வார்த்தை ஓவியங்களாகத் தீட்டி நம் பார்வைக்கு வைத்தார். நம் கண்கள் பனித்தன; இதயங்கள் நிறைந்தன. அந்த நிறைவு என்றும் இருக்கும்.

**— கி. ராஜேந்திரன்**

# காணக்



எஸ்.பாலு

## அத்தியாயம் பதினாறு

அருணகிரி கனகாவின் எதிரில் குத்துக்காலிட்டு உட்கார்ந்து, ''ஊம்! சாப்பிடு. எனக்கு நேரமாகுது'' என்று அவசரப்படுத்தினான்.

''ஊகூம்!'' என்று முகத்தை முறுக்கித் திருப்பிக் கொண்டாள் அவள்.

''சாப்பிட மாட்டே? இப்ப வாயிலே வைச்சுத் திணிச்சுடுவேன்.''

''திணிப்பீங்க, திணிப்பீங்க!''

''கூடாதா? அண்ணைக்கு நீ மட்டும் சோற்றை உருட்டி என் கையில் போடலாமோ?'' என்று கேட்டுக் கொண்டே கொஞ்சம் பொங்கலை எடுத்து அவள் வாயில் திணித்தே விட்டான் அருணகிரி.

அவனு இப்படிச் செய்தான்? என்ன துணிச்சல் அவனுக்கு?

அவள் 'தூ, தூ' என்று துப்பிவிட்டுச் சிரித்தாள். அவன் அவளைக் கோபமாக வெறித்துப் பார்த்தான். அதைக் கண்டு பயந்தவள் போல் பின்னல் நகர்ந்த கனகா நாணத்தால் முகம் சிவக்கச் சுற்றும் முற்றும் பார்த்துவிட்டுமெல்லவாயைத் திறந்தாள்.

அருணகிரி கலகல வெனச் சிரித்துக் கொண்டே, ''சரி; இப்ப நீயே சாப்பிடு!'' என்றவாறு எழுந்து விட்டான்.

ஏமாற்றமும் கோபமும் அடைந்தவளாய் அவசரமாகத் தன் கையிலிருந்த பொட்டலத்தைச் சுருட்டிக் கூடையின் இடுக்கில் செருகிவிட்டு எழுந்து நின்றாள்.

''என்ன, இதற்குள்ளே புறப்பட்டு விட்டே?''

''இந்த மாதிரி ஏமாத்துப் பேர்வழிங்களை நம்பவே கூடாது!''

''அடேயப்பா! என்ன கோபம் வருகிறது!''

''கோவமுமில்லே, ஒண்ணுமில்லே. நான் வரேன்'' என்று கோபச்சிணுங்கலுடன் சொல்லிக் கொண்டே கூடையைத் தூக்கித்

# கிடைக்காத தங்கம்

## ஜெகசிற்பியன்

தலையில் வைத்தவாறு வேகமாய் நடந்த அவள், மதில் சுவர் வாயிலை நெருங்கின சமயம் சட்டென்று நின்று பின்னால் திரும்பிப் பார்த்து விட்டு ஒல்கி ஒசிந்து மேலே நடக்கலானாள்.

'பெண்ணுக்குச் சாகசம் என்பது அவள் பிறக்கும் போதே கூடப் பிறந்துவிடும் போலும்' என்று எண்ணிப் புன்முறுவல் பூத்துக் கொண்ட அருணகிரி, அவளையே பார்த்துக் கொண்டு நின்றான். பிறகு பள்ளிக்கூட மணி அடிக்கவே, தன் சைக்கிள் கடையை நோக்கி விரைந்தான்.

அன்று மாலை ஆறரை மணிக்குத்தான் அவன் வேலைகளை முடித்துக் கொண்டு கிளம்பினான். கூலியில் இரண்டு ரூபாய் உயர்த்திய பிறகும் வழக்கம் போல் ஆறு மணிக்கெல்லாம் கையைக் கழுவிவிட்டுப் போவது தர்ம நியாயமாகாது என்று அவனுடைய மனச்சாட்சி உறுத்தியதாலேயே ஓர் அரை மணி நேரம் கூடுதலாக வேலை செய்துவிட்டுப் புறப்பட்டான்.

ஏழுமலைக்கு இதில் திருப்தி யில்லை. ஆனாலும் இன்னும் கொஞ்சம் விட்டுப் பிடிக்கலாம் என்று எண்ணியோ என்னவோ பேசாமல் இருந்துவிட்டான்.

என்றைக்கும் இல்லாத உற்சாகத்துடன் கிங்ஸ் பார்க்குக்கு வந்து சேர்ந்தான் அருணகிரி.

''இதோ பாரு, சஞ்சீவ்! இந்த மாமா வராரு!'' என்று இந்நேரம் வரை அவனை ஆவலுடன் எதிர்பார்த்துக்கொண்டிருந்தவள் போல் நாணச் சிரிப்புடன் சொன்னாள் அந்த ஆயாக்காரி. நேற்றை விட இன்று அவள் இன்னும் நன்றாக உடை அலங்காரம் பண்ணிச் சின்னப் பெண் மாதிரி காட்சியளித்தாள்.

தொலைவில் வரும்போதே அவளை அந்த வசந்த மண்டபத்தின் அருகில் பார்த்துவிட்ட அருணகிரி, வேறெங்கேனும் போய் உட்காரலாமா என்று எண்ணினான். ஆனால் அவள் அவ்வாறு சொன்னபின் அவளைக் கடந்து மேலே போவது எப்படி என்ற தயக்கத்துடன் மெல்ல வந்து நின்றான்.

''மாமாவுக்கு நமஸ்தே சொல்லு, சஞ்சீவ்!'' என்று மீண்டும் அதே குமரிச் சிரிப்புடன் கூறினாள் ஆயாக்காரி.

சைக்கிள் விடுவதில் மும்முரமாய் இருந்த குழந்தைப் பையன் சட்டென்று திரும்பி, ''நமஸ்தே அங்கிள்!'' என்றான் மழலைக் குரலில்.

அருணகிரியின் முகமெல்லாம் மலர்ந்தது. அவன் ஆசையோடு போய்ச் சிறுவனின் கன்னத்தைத் தட்டிவிட்டு அங்கிருந்த சிமெண்ட் பெஞ்சில் உட்கார்ந்து விட்டான்.

''இப்பத்தான் வர்றீங்களா தம்பி?'' என்று ரொம்பவும் பழகினவள் போல் கரிசனத்தோடு கேட்டுக் கொண்டே தள்ளு வண்டியைத் தள்ளியவாறு அவனருகில் வந்து நின்றாள் ஆயாக்காரி.

''ஆமாம்மா!'' என்று கூச்சத்தோடு பார்வையைத் தாழ்த்தியவாறு பதிலிறுத்தான் அருணகிரி.

''தம்பிக்கு என்ன வேலை?''

''ஒரு சைக்கிள் ரிப்பேர்க் கடையிலே இருக்கிறேன்.''

''அது எங்கே இருக்குது?''

''சிவாஜி சர்க்கிள் பஸ் ஸ்டாண்டுக்குப் பக்கத்திலே!''

''ஓ! அதுவா?'' என்று தலையாட்டிக் கொண்ட ஆயாக்காரி, ''ரிப்பேர் வேலை

முத்தென ஒளிரும்
முகமலர் பெற்றிட
லக்மே வேனிஷிங் க்ரீம்






எவ்வளவோ ஆண்டுகளுக்குப் பிறகுதான் இந்த நல்லொளியைப் பெறுகிறது ஒரு நல் முத்து. உங்களுக்கோ இதை உடனடியாக வழங்குகிறது லக்மே வேனிஷிங் க்ரீம். சிறிதே தடவுங்கள். வேண்டாத பளபளப்பையும், கிரீஸ் திட்டுக்களையும் அது விரைவிலே மென்மையாக அகற்றி, மறைந்து விடும். உங்கள் முகமலர் முத்தென ஒளிரும்.
மென்மையான இந்த அடிப்படை மீது லக்மே ஃபேஸ் பவுடரைப் பூசுங்கள். அது அழகூட்டும் விந்தையை இன்றே கண்டு மகிழுங்கள்.

லக்மே வேனிஷிங் க்ரீம்

பண்ணுறதனுலேதான் இப்படிச் சட்டை கால்சராய் எல்லாம் எண்ணெய் வடிஞ்சுக் கிடக்குதா?'' என்ருள் பரிவான குரலில். ''இந்த வயசில் உழைப்புத் தான் முக்கியம்; உடை இல்லே!''

அவள் இப்படிச் சொன்னது அருணகிரிக்கு ரொம்பவும் பிடித்தது. கூச்சக் குறுகுறுப்பெல்லாம் கலந்தவனுய் அவளைச் சாதாரணமாகப் பார்த்துப் புன் முறுவல் பூத்தான்.

வண்டியிலிருந்த குழந்தை சிணுங்க ஆரம்பித்தது. ''என்ன பேபி இதுக்குள்ளாற அழ ஆரம்பிச்சுட்டே? பசிக்குதா?'' என்று அன்புடன் கொஞ்சிக் கேட்டுக் கொண்டே அவ்வண்டியினுள்ளிருந்த ஒரு பையை எடுத்தாள் ஆயாக்காரி. ''இந்தா, பேபி பிஸ்கட்!'' என்றவாறு இரண்டு பிஸ்கட்டுகளைக் குழந்தையின் கையில் கொடுத்தாள். அழுகையை நிறுத்திவிட்டு அவற்றைச் சுவைக்க ஆரம்பித்தது குழந்தை.

''ஆயா, எனக்கு பிஸ்கோத்து!''

சைக்கிளை அருணகிரியின் அருகில் கொண்டு வந்து நிறுத்திவிட்டு வேகமாய் இறங்கி ஓடி வந்தான் சிறுவன். அவனிடமும் மூன்று பிஸ்கட்டுகள் கொடுத்தாள் ஆயாக்காரி. ''இங்கேயே உட்கார்ந்து தின்னுட்டுப் போடா! தின்னுக்கிட்டே சைக்கிள் விடப்படாது.''

பையன் இதற்கு உடனே கீழ்ப் படிந்தான்.

அருணகிரி அந்த அழகிய மூன்று சக்கரச் சைக்கிள் வண்டியை ஆவலுடன் — ஒரு சிறு பிள்ளைக்குரிய ஆர்வத்தோடு— பார்த்தான். அப்படியும் இப்படியுமாக அதை இழுத்துத் தள்ளிச் சாய்ந்தும் குனிந்தும் நோக்கினுன்.

அந்த விளையாட்டுச் சைக்கிள் ஓர் உயர்தரமான தயாரிப்புத்தான் என்பதில் அவனுக்குச் சந்தேகமில்லே. காரணம், அது வெளிநாட்டில் தயாரானது. அதனுல் அதன் ஒவ்வொரு பகுதியையும் கூர்ந்து கவனித்தான். எல்லாம் மிக மிக உறுதியாகவும் நேர்த்தியாகவும் அமைந்திருந்தன. 'சிறு பிள்ளைகளுக்கான விளையாட்டுச் சைக்கிளானுலும் எவ்வளவு பொறுப்போடும் உறுதியாகவும் இது தயாரிக்கப்பட்டிருக்கிறது' என்று எண்ணி உள்ளூற வியந்து கொண்டான்.

'நம் ஊரில் தயாரானது இப்படி இருப்பதில்லேயே' என்று அவன் நினைத்து வருத்தப்பட்டுக் கொண்ட அதே சமயம் ஒரு விசித்திரமான ஆசை அவனுள் கிளர்ந்தது. அந்தச் சைக்கிளேப் பார்த்து அப்படியே ஒரு காகிதத்தில் படமாக வரைந்து கொள்ள வேண்டும் என்ற ஆசையே அது.

'எதற்கு இந்த வீண் வேலே?' என்று ஒரு கணம் தயங்கினுன். பிறகு அவனுக்கே புரியாத விளையாட்டுத்தனமான ஓர் ஆசை தூண்டவே தன் ஜேபியிலிருந்து சிறு காகிதத்தை எடுத்துத் தொடை மீது வைத்துக் கொண்டு பென்சிலால் அந்த மூன்று சக்கர சைக்கிள் வண்டியைப் பார்த்து அதன் வடிவ அமைப்பை வரையலானுன்.

''சஞ்சீவ்! நீ மட்டும் பிஸ்கட் சாப்பிடறயே, இந்த மாமாவுக்குக் கொடுக்கலே? இந்தா, இதைக் கொண்டுபோய்க் கொடு!'' என்றவாறு ஐந்தாறு பிஸ்கட்டுகளே அடுக்கிச் சிறுவனின் கையில் கொடுத்து விட்டு அருணகிரியை ஓரக் கண்ணுல் பார்த்துப் புன்னகை பூத்தாள் ஆயாக்காரி.

அருணகிரியின் செவியில் அவள் சொன்னது விழவில்லே. அந்தச் சைக்கிள் வண்டியைப் பார்த்து வரைவதிலேயே அவன் கவனமாயிருந்தான்.

''மாமா, இந்தா பிஸ்கட்! ஆயா கொடுத்திச்சு.''

சட்டென்று நிமிர்ந்த அவன், சிறுவனேயும் அவளேயும் மாறி மாறிப் பார்த்து விட்டு, ''வேண்டாம் தம்பீ! நீ சாப்பிடு!'' என்ருன் சிரித்துக்கொண்டே.

''ஏன் மாமா? நீங்க இதையெல்லாம் திங்க மாட்டீங்களா?''

''தின்பேன், மறுபடியும் உன் மாதிரி குழந்தையாய்ப் பிறந்தால்!''

அவனே ஆச்சரியத்துடன் கண்களே மலர்த்திப் பார்த்த சிறுவன், ''அப்படீன்னு இப்பவே என் மாதிரி ஆயிடுங்களேன்? ஆயிட்டா, இந்தச் சைக்கிளைக் கூட விடுவீங்க இல்லேயா?'' என்ருன்.

''ஊம்'' என்று அருணகிரியும் தலையாட்டினுன்.

''உங்களுக்குச் சைக்கிள் விடத் தெரியுமா அங்கிள்?''

''விடுவேனே! இந்தச் சைக்கிளே விட்டுக் காட்டட்டுமா?''

''வேணும், வேணும்!'' என்று கோபமாகச் சொன்ன சிறுவன் தன் கையிலிருந்த பிஸ்கட்டுகளே ஆயாவிடம் எறிந்து விட்டு அவசரமாகச் சைக்கிளில் ஏறி ஓட்டத் தொடங்கிவிட்டான். எங்கே தன் சைக்கிளே அருணகிரி எடுத்துக்கொண்டு விடுவானே என்ற பயம் அவனுக்கு!

அருணகிரி சிரித்தான். சிரித்துக் கொண்டே தன் கையிலிருந்த காகிதத்தையும் பென்சிலேயும் சட்டைப் பையில் போட்டுக் கொண்டான்.

ஆயாக்காரியின் முகம் சற்றே வாட்டம் அடைந்திருந்தது. தான் கொடுத்தனுப்பிய பிஸ்கட்டை அவன் வாங்கிக் கொள்ள வில்லேயே என்ற வருத்தமாயிருக்கலாம் அவளுக்கு.

பிஸ்கட்டைத் தின்று முடித்ததும் மறுபடியும் சிணுங்க ஆரம்பித்தது குழந்தை. மாலைப் போதும் மங்கி இருள் சூழத் தொடங்கியது.

''அழாதே, பேபி! இன்னைக்கு உன் 'மூடு' சரியில்லை; வா, போகலாம்!'' என்றவாறு அருணகிரியை ஒருதினுசாகப் பார்த்துவிட்டு வண்டியைத் தள்ளிக் கொண்டு கிளம்பினாள் ஆயாக்காரி. சிறுவன் சஞ்சீவ் முரண்டுபண்ணிக்கொண்டே அவளைப் பின்தொடர்ந்தான்.

அருணகிரி தான் வரைந்த சைக்கிள் படத்தை எடுத்து அதையே சற்றுநேரம் பார்த்துக் கொண்டிருந்தான். ஆனால் அவனுடைய மனம் அதில் லயிக்காமல், அன்று பகல் கனகாவைப் பார்த்துப் பேசியதையும் அவளிடம் தான் நடந்து கொண்டதையும் பற்றி எண்ணுவதில் இறங்கிப் போயிற்று.

'அவளுக்குத்தான் என் மீது எவ்வளவு அன்பு! எத்தனை கரிசனம்! கடந்த பல தினங்களாக அவள் வராததைக் கொண்டு என்னை மறந்து விட்டாளாக்கும் என்று நினைத்து நானும் அவளை மறக்க முற்பட்ட சமயம் திடீரென்று வந்து விட்டாளே! அடேயப்பா, அவளது பேச்சும், சிரிப்பும், சிணுங்கலும், கோபமும், முறைப்பும், விறைப்பும்.... என்ன விசித்திரமான பெண் அவள்!' —

நேரம் எப்படியோ ஓடி விட்டது. இரவு எட்டரை மணி வாக்கில் வீடு வந்து சேர்ந்தான் அருணகிரி.

வந்த உடனேயே முத்தம்மாவிடம் போய், ''அக்கா! இந்த வாரத்திலேயிருந்து என் கூலியிலே ரெண்டு ரூபாய் உயர்த்தியிருக்கிறார் ஏழுமலை'' என்று தெரிவித்தான்.

இதைக் கேட்டுப் பெரிதும் மகிழ்ச்சியடைந்த முத்தம்மா, ''இனிமேல் நமக்கு நல்ல காலம் பொறந்திடும் தம்பீ! இந்த வீட்டுக்குக் குடி வந்தப்பவே எனக்கு அது தெரிஞ்சு போச்சு!'' என்று பரவசத்துடன் கூறிக் கொண்டே சுவரில் மாட்டியிருந்த முருகன் படத்தைப் பார்த்துக் கைகுவித்துக் கும்பிட்டான். பிறகு, ''அது சரி; மத்தியானம் அந்த டீக்கடைக்காரக் காக்காகிட்ட ஒரு பொட்டலம் கொடுத்துட்டு வந்தேனே, அதை வாங்கிக்கிட்டயா?'' என்று கேட்டான்.

''அவனே என்னைக் கூப்பிட்டுக் கொடுத்தான் அக்கா! சர்க்கரைப் பொங்கலும் வடையும் இருந்தன'' என்று சொல்லி மெல்லச் சிரித்தான் அருணகிரி.

''அது ஏதுன்னு தெரியுமா, தம்பீ? நம்ம எசமானியம்மா வீட்டிலே இன்னைக்கு ஒரு விசேஷம். சாமுண்டியம்மனுக்குப் பூஜை போட்டாங்க....''

''அப்படித்தான் இருக்கும்னு நினைச்சேன்.''

''அவசரப்படாம கேளுடா! பூஜையெல்லாம் ஆனப்புறம் எசமானியம்மா எனக்கு வழக்கமா கொடுக்கிறபடி பட்சணம், பலகாரம் எல்லாம் கொடுத்தாங்க. அதுக்கப்பாலே அந்தப் பெரிய பொண்ணு நிர்மலா ஓடி வந்து ஒரு பொட்டலத்தை என்கிட்ட கொடுத்து அதை உனக்குக் கொடுக்கும்படி சொல்லிவிட்டுப் போச்சு.''

திடுக்குற்று விட்டான் அருணகிரி. அந்த ஒரே விநாடியில் அவனுக்கு உடம்பெல்லாம் வேர்த்துக் கொட்டியது. திருதிருவென விழித்துப் பார்த்தான்.

''ரொம்பத் தங்கமான பொண்ணு தம்பீ அது! எல்லாரையும் சமமா பாவிச்சு நேசிக்கிற உயர்ந்த குணம் அதுக்கு ரத்தத்திலேயே ஊறிப் போயிருக்குது. உன்னை அது இன்னும் நேரிலேகூடப் பார்க்கலேன்னு நினைக்கிறேன். ஆனாலும் உன் ஞாபகம் அதுக்கு இருந்திருக்குது பாரு! தன் தாயார் கொடுத்த பட்சணங்கள் எனக்கும் என் பிள்ளைகளுக்குமே சரியாய்ப் போயிடும் — உனக்குப் பங்கு கிடைக்காதுன்னு நினைச்சு, உனக்குன்னே தனியாக் கொண்டு வந்து கொடுத்திருக்குது. அந்த மாதிரி பெரிய பணக்காரக் குடும்பத்திலே இப்படி ஒரு பொண்ணு இருக்குமான்னு நினைக்கவே ஆச்சரியமா இல்லே, தம்பீ?'' என்று மகிழ்ச்சியும் பெருமையும் பொங்கக் கூறிக் கொண்டே சமையல் காரியங்களில் கவனமானாள் முத்தம்மா.

அருணகிரி பெரிதும் குழப்பத்தில் ஆழ்ந்தான். அதனால் அன்றிரவும் தன் பரீட்சைக்கான பாடங்களைப் படிக்கவில்லை. இரவில் தனியாகப் படித்துக் கொண்டிருந்தால் எங்கே அந்தப் பெண் தன்னைப் பார்த்து ஏதேனும் கேட்க வந்து விடுவாளோ என்ற பயம் அவனுக்கு.

மறுநாளும் அவ்வாறே சாப்பிட்டானதும் வராந்தா விளக்கை அணைத்து விட்டுப் படுத்துத் தூங்கிப் போனான்.

இந்த இரண்டு தினங்களும் சாப்பாட்டுக் கூடைக்காரிக் கனகாவும் ஏனோ அவனைப் பார்க்க வரவில்லை. இது ஒருபுறம் அவனுக்குக் கவலையை அளித்து வந்தது.

வேலை முடிந்ததும் வழக்கம்போல் கிங்ஸ் பார்க்குக்குப் போய் மாலைப் பொழுதைப் போக்கி விட்டு வருவதை இன்னமும் நிறுத்தாமலேதான் இருந்தான். நாளெல்லாம் உழைத்துவிட்டு நேரே வீட்டுக்குப் போய் ஓய்வு பெற

# கோட்ஸ் இலவசமாக அளிக்கும் பூத்தையல், பின்னல் வேலை, மற்றும் நிட்டிங் டிசைன்கள் கொண்ட வண்ணக் காட்லாக்.

பூத் தையல், டாட்டிங் மற்றும் பின்-னல் வேலை பிரியர்களுக்கு எங்களுடைய அன்பழைப்பு: கவர்ச்சியான இந்த இலவச காட்லாக்கிற்கு எழுதுங்கள். எங்களிடம் கிடைக்கும் கோட்ஸ் ⚓ ஆங்கர் டிசைன் புத்தகங்கள் மற்றும் ⚓ ஆங்கர் நிட்டிங் காட்டன் விவர மடல்களின் பெயர்களோடு கூடிய முழுப் பட்டியல் இதில் அடங்கியுள்ளன.




**Coats ⚓ ANCHOR** Crochet, knitting, tatting and embroidery books



இன்றே இக்கூப்பனை எங்களுக்குத் தபாலில் அனுப்புங்கள்.

பின்னல் வேலை, நிட்டிங், டாட்டிங் மற்றும் பூத்தையல் டிசைன் நூல்-கள், விவரமடல்கள் ஆகியவற்றின் பட்டியலோடு கூடிய படங்கள் நிறைந்த கோட்ஸ் ⚓ ஆங்கர் காட்-லாக்கை எனக்கு இலவசமாக அனுப்ப வேண்டுகிறேன்

பெயர் ..............................

முகவரி ..............................

..............................

ஜே & பி. கோட்ஸ் (இந்தியா) பிரைவேட் லிமிடெட்.
மார்கெடிங் செக்ஷன்,
81, பால்டன் ரோடு, பம்பாய் 1.



**கோட்ஸ்**
நூல் தயாரிப்பாளர்கள்

Benson's/4752 Tam

வும், பிறகு பயனுள்ள காரியங்களில் ஈடுபடவும் முடியாமல் தினமும் இப்படி இரண்டு மூன்றுமணி நேரத்தை வீணைகப் பார்க்கில் உட்கார்ந்து சோம்பிக் கழிக்க வேண்டியிருக்கிறதே என்பதை நினைக்கும்போது அவனுக்கு வருத்தமும் வேதனையும் நெஞ்சைக் குடைந்தன. சில சமயம் ஆத்திரமும் எரிச்சலும் அடைவான். இதற்கெல்லாம் காரணமான அந்தப் பெண் நிர்மலாவை மனத்துள் வெறுத்து வசைந்தும் கொள்வான். இந்நிலை எப்போது மாறும், எப்படித் தீரும், என்ன செய்து பரிகாரம் காணலாம் என்று தீவிரமாக யோசிப்பான். எதுவும் புலப்படாத நிலையில் மீண்டும் மனம் சோர்ந்து முடங்குவான். இந்த ஆண்டு எப்படியும் செப்டம்பரில் பரீட்சை எழுதி எஸ். எஸ். எல்.சி.யில் தேறிவிட வேண்டும் என்ற தன் இலட்சியம் ஈடேருமல் போய்விடுமோ என்று நினைக்கும்போது அவனுக்கு அழுகையே வெடித்துக் கொண்டு வந்தது. சில சமயம் கண்ணீர் சிந்தி அவன் அழுதும் விடுவான்.





இன்னொரு விஷயம் என்னவென்ருல், கடந்த இரண்டு நாட்களாக அந்தப் பார்க்கில் அவன் வழக்கமாய் உட்காரும் வசந்த மண்டபத்தருகில் போய் உட்காருவதில்லை. கிழக்கு வாயில் பக்கம் சுற்றிக் கொண்டு சென்று ஒரு நீரூற்றுப் பொய்கையண்டை அமர்ந்து பொழுதைப் போக்கலானுன். இரவு நேரங்களில் அப்பொய்கையின் நடுவே அமைந்துள்ள நீரூற்றுக் குழாய்களிலிருந்து வர்ணத் தண்ணீர் பீச்சியடித்து வழியும் காட்சி பார்க்க மிகவும் ரம்மியமானது. வண்ண விளக்குகளைக் கொண்டு அந்த வர்ண நீர்ப் பொழியும் விசித்திர ஜாலக் காட்சி அமைக்கப்பட்டிருந்தது.

அருணகிரிக்கு அவ்வினிய காட்சியைக் காண்பது நல்ல பொழுதுபோக்காயிற்று. ஆனுல் இதற்காகவே இப்புதிய இடம் தேடி வந்தான் என்று சொல்ல முடியாது. அந்த ஆயாக்காரியைச் சந்திப்பதைத் தவிர்க்க வேண்டும் என்பதற்காகவே அவ்விடத்துக்குப் போகாமல் இங்கு வரலானுன். அவனுக்கு ஏனே அவளுடைய பேச்சு, பார்வை, சிரிப்பு எதுவும் பிடிக்கவில்லை. ஏன் பிடிக்கவில்லை என்பதற்குக் காரணம் தெளிவாகத் தெரியாவிட்டாலும் அதைத் தெரிந்து கொள்ளவும் அவன் விரும்பவில்லை. அவளை வெறுக்கிருனு? அல்லது அவளுக்குப் பயப்படுகிருனு? இதையும் அவனுல் நிர்மாணிக்க முடியவில்லை. எனினும் இவ்விரண்டில் ஏதோ ஒன்றினுல் தூண்டப்பட்டே அவளைப் பார்க்க வேண்டாம் என்ற முடிவுக்கு வந்திருக்கிறேம் என்பது மட்டும் அவனுக்குப் புரிந்தது.

மூன்றும் நாள் இரவு அந்தப் பார்க்கிலிருந்து வீடு வந்து சேர்ந்ததும் குளித்துச் சாப்பிட்டு விட்டுப் படுக்கையை எடுத்துக் கொண்டு வராந்தாவுக்கு வந்த அருணகிரி உடனே படுத்துவிட மனமின்றிச் சற்று நேரம் உட்கார்ந்திருந்தான்.

நீண்ட நாட்களுக்குப் பின் இன்று தான் தன் தாயைப் பற்றிய ஏக்க நினைப்பு அவனுக்குத் தோன்றியது. இத்தனை காலமும் அவள் எண்ணமே இல்லாதிருந்தவன் இப்போது ஏன் அவளை நினைத்து ஏங்குகிருன்? இதன் காரணத்தை அவனுலேயே அறிய முடியவில்லை. சமீப நாட்களாகப் பல எதிர்பாராத நிகழ்ச்சிகள் அவனது வாழ்க்கையிலே குறுக்கிட்டு அவற்ருல் அதிக அளவு சங்கடமும், துயரமும், அமைதிக் குலைவும், சபலப் பிரமிப்பும் நேர்ந்து வருவதையொட்டி ஒருவித மிரட்சிக்கு அவன் உள்ளாகியிருப்பது அதற்குக் காரணமாயிருக்கலாம்.

'பாவம், அம்மா எப்படி இருக்கிருளோ? தன்னந் தனியாய்க் கிடந்து என்னென்ன கஷ்டங்களை அநுபவிக்கிருளோ? ஆண் பிள்ளை இருந்தும் தனக்கு உதவியாக இல்லையே என்று மனம் கசந்து கண்ணீர் விட்டுக் கரைந்து கொண்டிருப்பாளோ?'

இதற்கு மேல் சிந்தனையை ஓட்டி, இப்போதிருக்கும் கவலைகளோடு இன்னும் கவலைகளைச் சேர்த்துத் தன்னைத் தானே வருத்திக் கொள்ள விரும்பாதவனுய், சட்டென்று படுக்கையை விரித்துப் போட்டுப் படுத்தான்.

இரவு மணி பத்தாகியும் அவனுக்குத் தூக்கம் பிடிக்கவில்லை. தூங்காமல்

சும்மா படுத்திருந்ததால் உடம்பும் நோவு எடுத்தது.

'கடந்த மூன்று நாட்களாக அந்தப் பெண் நிர்மலா இங்கு வரவில்லையே! அக் காதல் கடித விஷயத்தை அன்றே மறந்தும் மன்னித்தும் விட்டு விட்டாளோ? அப்படியானால் நான் தான் அதுபற்றி அநாவசியமாகப் பயந்து, வீணாக மனத்தைக் குழப்பிக் கொண்டு கிடக்கிறேனோ?'

அவன் சட்டென்று எழுந்து உட்கார்ந்து விளக்கைப் போட்டான். உள்ளே எல்லாரும் நன்றாகத் தூங்கிக் கொண்டிருந்தார்கள். பல தினங்களாகத் தொடாமல் 'கிடந்த தன் பாடப் புத்தகங்களைத் தூசி தட்டி எடுத்து வந்து படிக்க ஆரம்பித்தான். படிப்பதில் ஏனோ மனம் லயிக்கவில்லை.



"புதுசா ஸ்கூட்டர் வாங்கினாயாமே! ஏன் என்னிடம் காட்டவில்லை?"

கணக்குகளாவது போட்டுப் பார்க்கலாம் என்று கணக்குப் புத்தகத்தையும் நோட்டையும் பிரித்து வைத்துக் கொண்டு தன் சட்டை ஜேபியிலிருந்து பென்சிலை எடுத்தான். அத்துடன் நாலாக மடித்த ஒரு காகிதமும் வந்தது. அன்றொரு நாள் மாலை அவன் கிங்ஸ் பார்க்கில் உட்கார்ந்து அச்சிறு பையனின் மூன்று சக்கரச் சைக்கிள் வண்டியைப் பார்த்து வரைந்த படமே அது.

விளக்கு வெளிச்சத்தில் அப்படத்தையே சற்று நேரம் பார்த்துக் கொண்டிருந்தான். அதைப் பார்க்கப் பார்க்க அவனது மனத்தில் ஒருவித உற்சாகம் ஊற்றெடுத்தது. அத்துடன், அந்தப் படத்திலுள்ள சைக்கிளின் வடிவத்தைச் சற்றே மாற்றி அமைத்தால் இன்னும் நன்றாக இருக்கும் என்றும் அவனுக்குத் தோன்றியது. எந்தெந்தப் பகுதியை எப்படி யெப்படி மாற்றலாம் என்று சிந்தித்தான்.

சிந்தித்தவாறே, கணக்கு நோட்டை மூடி வைத்துவிட்டு ஓர் அகலமான வெள்ளைக் காகிதத்தில் தன் கற்பனையிலே தோன்றியபடி, மூன்று சக்கரச் சைக்கிள் படம் ஒன்றை வரைந்து முடித்தான். அவன் வடிவம் அமைத்து வரைந்த படத்துக்கும் முந்தைய படத்துக்கும் நிரம்ப வித்தியாசம் தென்பட்டது. அதும் சைக்கிளின் இயக்க நுணுக்கக் கண்ணோட்டத்துடன் பார்க்கும்போது அவனுடைய வடிவமைப்புப் படமே சிறப்பாயிருப்பதாகவும் தெரிந்தது.

அடுத்து, அப்புதிய வடிவில் வரைந்த சைக்கிளின் ஒவ்வொரு பகுதியையும் தனித் தனிப் படங்களாக — அததற்குரிய நீள, அகல, கனப் பரிமாணக் கணக்குகளின் துல்லியமான விவரங்களோடு — ஒரு தேர்ந்த பொறி இயல் தொழில் நுட்ப வல்லுநனைப் போல் அத்தனை திறம்பட வரையலானான்.

எல்லாம் வரைந்து முடித்துப் பார்த்த போது அவனுக்கே ஒரு பிரமிப்பு தட்டியது. உருக்கு வார்ப்பு, பற்ற வைப்பு, கடைசல், துளையிடல், அறுத்தல், இணைத்தல், பாலிஷ் பண்ணுதல் முதலான இயந்திர வசதிகளுடன் கூடிய ஒரு சிறு பட்டறை இருந்தால், இவ் வடிவமைப்புப் படத்தை மாதிரியாகக் கொண்டு, சுமார் எண்பத்தைந்து சதவிகித உறுப்புக்களை — கைப்பிடிக்கான ரப்பர்க் குழாய், சக்கரங்களுக்குரிய கெட்டி டயர், ஆசனம், பெல், பெடல் கட்டை முதலான உறுப்புக்கள் நீங்கலாக — தானே உற்பத்தி செய்து, மேற்சொன்ன பாகங்களை வெளியிடங்களில் வாங்கி இணைத்துப் புத்தம் புது ரகமான ஓர் அழகிய மூன்று சக்கரச் சைக்கிள் வண்டியை உருவாக்கிவிட முடியும் என்று அவனுக்குத் தோன்றியது.

'இதற்குமுன் இத்தகைய முயற்சியில் பொழுது போக்காகக்கூட ஈடுபட்டிராத தன்னால் இன்று திடீரென்று எங்ஙனம் இவ்வாறு வரைய முடிந்தது?' இது அவனுக்கே விளங்காத ஒரு புதிராக வியப்பூட்டியது.

மகிழ்ச்சிப் பரவசத்துடன் அவ்வரை படங்களையே பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்தான் அவன். இரவு மணி இரண்டுக்கு மேல் ஆகியிருக்கும்.

"மிஸ்டர்! இப்படிக் கொஞ்சம் வருகிறீர்களா?"

அதிர்ச்சியுற்று நிமிர்ந்தான் அருணகிரி. வெளியே, வராந்தா கனிர் ஓரம் அந்தப் பெண் நிர்மலாதான் வந்து நின்று கொண்டிருந்தாள்! (தொடரும்)

# மேனகா

## ஹெச். வி. சாவித்ரம்மா

கல்யாண வீட்டில் எல்லோருடைய கவனமும் மேனகாவின் மேல்தான். அவள் அந்தக் கல்யாணத்துக்கு வருவாள் என்று யாருமே எதிர்பார்த்திருக்கவில்லை. 'ஏதோ ஒப்புக்காக அழைத்ததை ஏற்றுக் கொண்டு, மானம் மரியாதை எல்லாவற்றையும் துறந்துவிட்டு வந்துவிட வேண்டுமா?' என்றுதான் எல்லோரும் கவலைப்பட்டார்கள். தேவகிக்கும் அப்படித்தான் தோன்றியது. மேனகா அவளுடைய சொந்தத் தங்கையின் மகள்தான். வேறு சந்தர்ப்பத்தில் அவள் வந்திருந்தால் தேவகிக்கு ஓர் ஆட்சேபணையும் இருந்திருக்காது. மாறாக, பரிவுதான் அதிகமாகியிருக்கும். ஆனால் அவளது புக்ககத்து மனிதர்கள் இவ்வளவு பேருக்கு எதிரில், பழிச் சொல்லுக்கு அஞ்சாமல், மேனகா வந்ததுதான் அவளுக்குப் பிடிக்கவில்லை.

மேனகாவைக் கண்டதுமே தேவகி பொறுக்காமல், ''வந்துட்டியா மேனகா?'' என்று வரவேற்றிருந்தாள். மேனகா சிரித்துக் கொண்டே, ''வராமல் என்ன பெரியம்மா? நீ அழைச்சது பெரிசா, நான் வந்தது பெரிசா? உங்களை யெல்லாம் பார்த்து எத்தனையோ நாளாச்சு. ஹரிணி பாவாடை உடுத்திண்டிருந்தப்போ பார்த்தது. இப்ப அவள் கல்யாணத்துக்காவது வர வேண்டாமா?'' என்று பதிலளித்தாள்.

எத்தனையோ வருடங்கள் ஆகிவிட்டிருந்தன, உண்மைதான்! மேனகாவுக்கும் இப்போது சுமார் முப்பது வருடங்கள் இருக்கலாம். அந்தக் கடந்து போன வருடங்களில் நிகழ்ந்த சம்பவங்கள்தாம் எத்தனை? மேனகாவின் கல்யாணத்தைப் பற்றிய நினைவு இன்னும் தேவகியின் மனத்திலிருந்து மறைந்திருக்கவில்லை. பின்னால் நடக்கப் போகும் நிகழ்ச்சிகளின் நிழல்கூட அப்பொழுது தோன்றியிருக்கவில்லை.

சோமசுந்தர் மேனகாவுக்குப் பொருத்தமான வரன். மேனகாவோ அந்த யௌவனத்தில் அவளது பெயருக்குத் தக்கபடி தேவ கன்னிகையைப் போல் விளங்கினாள். கல்யாணத்தன்று அவள் நீலப் புடவை உடுத்தி, நகைகள் அணிந்து மணையின் மீது உட்கார்ந்திருந்த பொழுது எல்லோருடைய கண்களும் அவள் பேரிலேயே லயித்து விட்டிருந்தன. சோமசுந்தரும் அப்படியே. நல்ல உயரம், பார்த்தவர்களுக்கு இன்னொரு முறை பார்க்க வேண்டும் என்ற ஆசையை ஊட்டும் சிரித்த முகம். அந்தக் கல்யாண வீட்டில் ரொம்பவும் பெருமிதத்துடன்தான் தேவகி வளைய வந்தாள்.

*ஆனால்?*

*என்ன கல்யாணம்!*

அந்த நான்கு நாட்கள் கல்யாணத்தில் மகிழ்ச்சியோடு வளைய வந்ததோடு மேனகாவின் குடும்ப வாழ்க்கையின் சுப தினங்கள் முடிவடைந்து விட்டன. கல்யாணம் ஆகி ஒரு மாதத்துக்குள்ளாக வெளிநாட்டுக்குப் புறப்பட்டுச் சென்ற சோமசுந்தர் இந்த வருஷம் திரும்பி வருவான், அடுத்த வருஷம் திரும்பி வருவான் என்று எதிர்பார்ப்பதிலேயே காலம் கடந்து போய் விட்டது. நீண்ட பதினைந்து வருடங்கள் ஓடி மறைந்த பின்பும்கூட அவனைப் பற்றிய செய்தியே இல்லை. அவன் வெளிநாடு சென்ற இரண்டு வருடங்களுக்குப் பிறகு உயர்நிலைப் பள்ளியில் சேர்ந்த மேனகா ஹைஸ்கூல் படிப்பையும் முடித்து, கல்லூரிப் படிப்பையும் முடித்து நான்கைந்து வருடங்களாகி விட்டிருந்தன.

தவறு யாருடையது?

ஒவ்வொருவர் ஒவ்வொன்றைச் சொன்னார்கள்.

எது எப்படியோ. மேனகாவைப் பொறுத்த வரையில் அவன் அவளுக்கு இல்லை என்றாகி விட்டது.

தேவகியே சோமசுந்தருக்குக் கடிதம் எழுதினாள். மேனகாவை விட்டும் எழுதச் சொன்னாள். இரண்டுக்கும் பதில் இல்லை.

தாயாரும் தந்தையும் இறந்த பிறகு மேனகா அந்தப் பெரிய வீட்டுக்கும் திரண்ட சொத்துக்கும் அதிபதியானாள். சில காலம் வெளியில் எங்கும் போவதற்குத் தயங்கிக் கொண்டிருந்த மேனகா கொஞ்சம் கொஞ்சமாக எல்லா இடங்களுக்கும் போய் வரத் தொடங்கினாள். பெங்களூரில் வேடிக்கைக்கும், விநோதத்துக்கும் இடங்களா இல்லை? வாரத்துக்கு மூன்று முறை தவறாமல் சினிமாவுக்குப் போவாள். 'கிளப்'பிலிருந்து அவள் வீடு திரும்புவது நள்ளிரவு கழிந்துதான்.

அவளைப் பற்றிய விஷயங்களைப் பேசுவதென்றால் அவளுடைய உறவினர்களுக்கெல்லாம் வெல்லத்தை ருசிப்பது போல. நான்கு பேர்கள் சேர்ந்தால் மேனகாவைப் பற்றிப் பேசாமல் இருக்க முடியாது. அப்படிப்பட்ட பல பேச்சுக்கள் தேவகியின் காதுகளிலும் விழுந்து கொண்டிருந்தன. ''பிறக்கும்போதே அவளுடைய பெற்றோர்களுக்கு அவள் லட்சணம் எப்படித் தெரிந்தது? மேனகா என்ற பெயர் வைத்தார்களே!'' என்றனர் சிலர்.

ஹரிணியின் விவாகத்துக்கும் சில தடங்கல்கள் ஏற்படத்தான் செய்தன. அவளுடைய அத்தை வாய் கூசாமல், ''உங்க குடும்பத்துக்கும் எங்களுக்கும் சரிப்பட்டு வராதம்மா'' என்றாள்.

''எங்கள் குடும்பம் என்றால் அது உங்கள் குடும்பம் இல்லையா, மன்னி?'' என்று தேவகி அழாக் குறையாகக் கெஞ்சியபோது, ''இருந்தாலும்....'' என்று ராகம் இழுத்துவிட்டு அத்தை வாயை மூடிக் கொண்டாள்.

ஆனால் இதனால் ஹரிணிக்கு ஒன்றும் நஷ்டம் உண்டாகவில்லை. அவளுக்குக் கிடைத்த வரன் அழகான வாலிபன். அப்படிச் சொல்லிக் கொள்வதற்கே தேவகிக்குப் பயம். ''மேனகாவின் கணவனுக்கு என்ன குறை இருந்தது? தலைவிதியை மாற்ற யாரால் முடியும்?'' என்று நினைத்து நடுங்கினாள்.



ஸ்ரீமதி சாவித்ரம்மா கன்னட மொழியில் பிரபல சிறு கதை எழுத்தாளர். தாகூர், லெனின், லூயிபிஷர் போன்றவர்களைக் கன்னட மொழியில் தந்தவர். ஆண்டன் செக்காவின் சிறு கதைகளைக் கன்னடத்தில் மொழிபெயர்த்துத் தந்ததற்காக நேரு சோவியத் பரிசும் பெற்றிருக்கிறார். 'மேனகா' - பெண்மையின் மனக் குமுறலை வெளிப்படுத்தும் அழுத்தமான கதை.

# கன்னடம்

மேனகா ஹரிணிக்கு ஒரு பெரிய வெள்ளித் தட்டைக் கல்யாணப் பரிசாக ஒதிவைத்தாள்.

தேவகியின் மன்னி சொர்ணம் தன் தங்கையின் முகத்தைப் பார்த்துச் சிரித்தாள்.

மேனகா, ''என்ன சொர்ணம் மாமி, என்னை அடையாளம் தெரியலியா? பேச மாட்டேங்கிறேளே?'' என்று கேட்டாள்.

சொர்ணம், ''எவ்வளவு வருஷமாச்சு, என்ன கதை? அடையாளம் தெரிஞ்சாலும் பேசறதுக்கு என்ன இருக்கு?'' என்று மறுமொழி பகன்றாள்.

சொர்ணத்தின் தங்கை விருதா, ''எங்களைப் போல இருக்கிறவா உன்னோடு என்னத்தைப் பேசறது?'' என்று கேட்டாள்.

''உங்களைப் போல இருக்கிறவான்னு சொன்னு....?''

''எங்கள் வாழ்க்கைப் பாதையே வேறே. உங்கள் வழியே வேறே. நீங்களெல்லாம் பெரிய மனுஷாள்'' என்று கிண்டலாகக் கூறிச் சிரித்தாள்.

மேனகா வருத்தம் கலந்த புன்சிரிப்புடன் ''நானும் உங்களைப் போல் ஒரு பெண்தான் விருதா'' என்றாள்.

தேவகி இடையில் புகுந்து, ''எழுந்திரு மேனகா, சாப்பாட்டுக்கு நேரமாச்சு'' என்று கூறி அந்தச் சம்பாஷணைக்கு ஒரு முற்றுப் புள்ளி வைத்தாள்.

''இந்தக் கும்பலில் மேனகா வந்திருக்கவே கூடாது. இந்த மனுஷாளின் பேச்சுக்களுக்கு அவள் ஏன் இடம் கொடுக்கணும்? அவளுக்கு எவ்வளவு மனக் கஷ்டமோ, வேதனையோ? அவளுக்கும் ஆண்டவனுக்குமே அது தெரி

யும். தெரியாதவா வாய் போனபடியெல்லாம் பேசுவதை அவள் ஏன் காது கொடுத்துக் கேட்கணும்?'' என்று தேவகியின் மனம் வருந்தியது. மேனகா தனியாக இருந்த பொழுது தேவகி அவளிடம் தன் மனத்தில் பட்ட இந்த எண்ணத்தைத் தெரிவித்து விட்டாள்.

''இவாகிட்டேயெல்லாம் பேச்சுக் கேட்கறதுக்கு ஏன் இங்கே வந்தே, மேனு?''

''சொன்னா சொல்லிண்டு போகட்டும், பெரியம்மா. வீட்டில் ரொம்பவும் அலுத்துப் போச்சு. இந்த உலகத்தில் இருந்தும் இல்லாத மாதிரி இருப்பது எவ்வளவு நாளைக்கு முடியும்? ஒருவாட்டி எல்லோரோடும் சேர்ந்து, ஓடியாடிப் பழகலாம்னு நினைச்சிண்டு வந்தேன். உன்னைப் பார்த்தும் எவ்வளவோ நாளாச்சே, பெரியம்மா!''

''அது யாரோட தப்பு, மேனு? நான் என்ன உன்னை வரவேண்டாம்னு சொன்னேனா? உங்க பெரியப்பாதான் அப்படிச் சொன்னாரா? நீ எப்பவும் இங்கே வரலாம். நீயாகத்தான் வராம இருந்தே?''

''என்னால் உங்களுக்கு எதற்குத் தொந்தரவு, பெரியம்மா? நான் எப்பவும் உங்க வீட்டுக்கு வந்துண்டு போயிண்டு இருந்திருந்தா ஹரிணிக்குக் கல்யாணம் ஆகியிருக்குமா? என் கிரகசாரம் என்னோட...''

''சுவாமிக்குக் கண்ணில்லே, மேனு! உன் மனசு ரொம்ப நல்லது.''

உண்மைதான்! தெரியாதவர்கள் மேனகாவை இகழலாம். அவள் பட்ட கஷ்டங்களையும் வேதனைகளையும் அநுபவித்தவர்கள் அவளைப் பழி சொல்ல மாட்டார்கள்.

மேனகா யாருடைய அபிப்பிராயத்தையும் பொருட்படுத்தியதாகத் தெரியவில்லை. அந்தக் கல்யாண வீட்டில் அவளைத்தவிர அழகி வேறு யாரும் இருக்கவில்லை. அவள் செய்து கொண்டிருந்த அலங்காரமும் பார்ப்பவர்களின் கவனத்தை ஈர்க்கும்படி அவ்வளவு நேர்த்தியாக இருந்தது. கழுத்திலும் இடுப்பிலும் ஒளிவிட்டுக் கொண்டிருந்த வைரக் கற்களை மறைக்க அவள் முயலவில்லை. எல்லோருடனும் அவள் சரளமாகப் பேசிப் பழகிய போதிலும் யாருடைய மனத்திலும் அவள் ஒட்டாமல் எட்டியே நின்றாள்.

''சாயங்காலம் ஆயிட்டுதே. ஹரிணிக்குப் பின்னல் போட வேண்டாமா, தேவகி?'' என்று சொர்ணம் கேட்டாள்.

''எனக்கு மேனகா பின்னிவிடறாளாம்'' என்று ஹரிணியே அதற்குப் பதில் சொன்னாள்.

சொர்ணம் பேசாமல் அங்கிருந்து விசுக்கென்று எழுந்து போய் விட்டாள்.

மாலையிலும் அப்படியே. வந்தவர்கள் எல்லோருடைய பார்வையும் லயித்தது மேனகாவின் பேரில்தான்.

எல்லோரும் வந்துவிட்டுப் போன பிறகு மேனகா தம்பூராவை எடுத்து வைத்துக் கொண்டு பாடத் தொடங்கினாள். அனைவரும் நகராமல் அமர்ந்திருந்து கேட்டனர். சாப்பாட்டுக்கு நேரமாகிவிட்டதென்று தேவகி எவ்வளவோ முறை சொல்லியும் யாரும் இருந்த இடத்தைவிட்டு எழுந்திருக்கவில்...

ஹரிணியின் கணவன், ''இவர் உன் சித்தியின் பெண் என்று எனக்குத் தெரியவே இல்லை, இதுவரையில்!'' என்று பாராட்டும் குரலில் மனைவியிடம் கூறினான்.

ஹரிணிக்கு மனத்தில் பயம். ''ஏன் உங்களுக்கு இவளை முதலிலேயே தெரியுமா?'' என்று கேட்டாள். அவன் பேச்சை வளர்த்தாமல், ''எங்கேயோ பார்த்திருக்கிறேன். இவ்வளவு நன்றாகப் பாடுவார் என்று தெரியாது'' என்றான்.

''எல்லா விஷயத்திலும் மேனகா அப்படித்தான். நல்ல அதிர்ஷ்டம் ஒன்றைத்தான் அவள் கேட்டுக் கொண்டு வரவில்லை.''

பாட்டு முடிந்ததும் தேவகியின் கணவன், ''நீங்கள் இவ்வளவு நன்றாகப் பாடுவேன்னு தெரிந்திருந்தா நான் கல்யாணக் கச்சேரிக்காகச் செலவழிச்சிருக்க மாட்டேன்'' என்று தம் பாராட்டைத் தெரிவித்துக் கொண்டார்.

தேவகிக்குக் கேட்கும்படியாகச் சொர்ணம், ''இப்படி எல்லோர் கண்ணிலேயும் சொக்குப் பொடி போடறவ புருஷனைக் கைக்குள் போட்டுண்டிருந்தால் நல்லா இருந்திருக்கும்....'' என்றாள்.

தேவகி அதற்கு மறுமொழியாக, ''அவளுக்கு அந்தப் புண்ணியம் இல்லேன்னா யார் என்ன செய்ய முடியும்?'' என்றாள்.

விருதா, ''புண்ணியம்!'' என்று கூறி நக்கலாகச் சிரித்தாள். பேச்சை மேலே வளர்த்துவதில் பயனில்லை என்று தேவகி பேசாமல் இருந்து விட்டாள்.

* * *

சொர்ணம் இப்போது மேனகாவைப் பற்றிப் பேசும்படியாக இல்லை. அவள் தேவகியோடு பேசுவதையும் விட்டு விட்டாள்; தம்பியின் வீட்டுக்கு வருவதையும் நிறுத்திவிட்டாள். ஜயராம் கல்யாண வீட்டிலேயே மயங்கியிருக்கக் கூடும்; மேனகாவின் அழகிலும், சங்கீதத்திலும் மனத்தைப் பறிகொடுத்திருக்கக்கூடும். அதில் ஆச்சரியப்படுவதற்கு ஒன்றும் இல்லை. அங்கே கூடியிருந்தவர்களெல்லாம் அவள் அழகிலும், இனிய பேச்சுக்களிலும் மனத்தைப் பறி கொடுத்தவர்கள்தாம். சொர்ணத்தின் மாமனார்கூட — என்பது வயதுக் கிழவர் அவர் — வீட்டுக்கு வந்ததும், ''பெண் என்றால் அப்படி இருக்க வேண்டும். என்ன அழகு. என்ன சாதுரியம்! அந்தச் சோமசுந்தரனுக்குப் புத்தி இல்லை. எந்தச் சீமையில் தேடினாலும் இப்படிப்பட்ட மனைவி கிடைப்பாளா?'' என்று கூறினார். சொர்ணம் வெறுப்போடு, ''ஆச்சு, காலங்கார்த்தாலே அவள் புராணம். வேறே பேச்சே இல்லையா?'' என்று அலுத்துக் கொண்டாள்.

ஜயராம், ''அப்பபா! என்ன குரல்!'' என்று ஆச்சரியப்பட்டுக் கொண்டான்.

சொர்ணம், ''நீயும் ஆரம்பிச்சுட்டியா? இல்லாமல் எல்லார் வாயிலேயும் ஏன் புகுந்து புறப்படறா, அவ? நெருப்பில்லாமையா புகை வரும்?'' என்றாள்.

ஜயராம் கோபத்துடன், ''மனுஷாள் வாய்க்கென்ன? அவளைத் தவிக்க விட்டுட்டு ஓடிப் போன புருஷனைப் [illegible]

# அருமையான சுவை என்பது
## ஒரு விஷயம், சக்திமிக்க போஷாக்கு



## என்பது மற்றொரு முக்கியமான விஷயம்

அந்தப் போஷாக்கைப் பெறுவதற்குதான் எவ்வளவு கரகரப்பான, சுவைமிக்க வழி! பார்லே க்ளூகோ பிஸ்கெட்டுகளில் பால், கோதுமை மற்றும் சர்க்கரையின் நல்ல அம்சங்கள் எல்லாம் நிரம்பியுள்ளன— புரதங்களும் வைட்டமின்களும் அபரிமிதமாக அடங்கியுள்ளன.




எனவே

**பார்லே க்ளூகோ**
**பிஸ்கெட்டுகள்**

இந்தியாவின்
மிக அதிகமாக
விற்பனையாகும்
பிஸ்கெட்டுகள்

குழந்தைகளுக்கு விசேஷமாக சிறந்து விளங்குவதில் வியப்பில்லை

everest/900j/PP tm

ஒன்றும் சொல்லக் காணோம். அவள் பாட்டுக்கு அவளைத் தவிக்கவிட்டப்புறம் அவள் நடத்தையைப் பற்றிப் பேசுவதற்கு இந்தச் சமூகத்துக்கு என்ன உரிமையங்கிறேன்?'' என்றான்.

சொர்ணம் பதில் ஒன்றும் பேசாமல் முகத்தைத் திருப்பிக் கொண்டாள்.

ஐயராம் மேனகாவுடன் உறவை வளர்த்துக் கொண்டு வருகிறான் என்கிற செய்தி பல பேர் வாயில் நுழைந்து புறப்பட்டுச் சொர்ணத்தின் காதுகளுக்கும் எட்டியது. அதைக் கேட்டு அவள் இதயம் நொறுங்குற்றது. அவனுக்கு இவ்வளவு நாட்களாகக் கல்யாணம் செய்யாமலிருந்ததே பிசகு. ஹரிணியைக் கொடுக்கிறேன் என்று தேவகி முன்வந்த போதே செய்து விட்டிருக்க வேண்டும். அவள் குடும்பத்தைப் பற்றி அப்போது பழித்துப் பேசியதற்கு இப்போது தனக்குச் சரியான தண்டனை கிடைத்த மாதிரி ஆயிற்று! மகனுடன் அதுபற்றிப் பேச முயன்றபோது ஐயராம், ''போம்மா, இல்லாததையும் பொல்லாததையும் யாரோ உன்னிடம் கோள் மூட்டியிருக்காங்க. அவளைச் சொல்லாம இருந்தா உங்களுக்கெல்லாம் சாப்பிட்ட சாப்பாடு ஜீரணமாகாது. ஆமாம்!'' என்று கூறி விட்டான்.

ரகுராமய்யா மகனை அழைத்து, கல்யாணப் பேச்சை எடுத்த போது ஐயராம் தான் கல்யாணமே செய்து கொள்ளப் போவதில்லை என்று கூறினான். அப்போது அவர், ''ஊரில் எல்லோரும் உனக்கும் மேனகாவுக்கும் தொடர்பு இருப்பதாகப் பேசிக்கிறது தெரியுமா?'' என்று கேட்டார்.

ஐயராம் என்றைக்குமே தலை நிமிர்ந்து தந்தையைப் பார்த்துப் பேசியவன் இல்லை. இன்றைக்கும் தலை குனிந்தபடியேதான் இருந்தான். ரகுராமய்யா சிறிது நயமாகவே, ''இப்படியெல்லாம் பேச்சுக்கு இடம் கொடுக்காதே ஐயராம். நீ இன்னும் பையன், நாங்க உன்னைப் பத்தி எவ்வளவோ ஆசை வைச்சுண்டிருக்கோம். அதையெல்லாம் அழிச்சுடாதே'' என்றார்.

அப்போதும் ஐயராம் வாய் திறக்கவில்லை. கடைசியில் சொர்ணம் தன் கர்வத்தை மூட்டை கட்டி வைத்துவிட்டு மேனகாவின் வீட்டுக்கே சென்றாள்.

''என்ன சொர்ணம் மாமி! இன்னிக்கு ரொம்ப நல்ல நாள்தான் போங்கோ. நீங்க என் வீட்டுக்கு வந்துட்டேளே!'' என்றாள்.

சொர்ணத்தின் நெற்றியிலெல்லாம் வியர்வைத் துளிகள் அரும்பி நின்றிருந்தன. மேனகாவுடன் பேச வேண்டிய விஷயம் தன் வீட்டிலிருந்தபோது சுலபமானதாகத் தோன்றியிருந்தது. ஆனால் இப்பொழுதோ நா அசைய மறுத்தது. மிகவும் பிரயாசைப் பட்டு, ''என்னம்மா செய்யட்டும்? நானே வரவேண்டியதாயிற்று'' என்று கூறினாள்.

மேனகா சிரித்தபடியே, ''ஏன் இவ்வளவு அலுத்துக் கொள்கிறீர்கள், சொர்ணம் மாமி? நீங்க வந்தது எனக்கு எவ்வளவோ சந்தோஷம்'' என்றாள்.

சொர்ணம் உடனே, ''இந்த உபசார வார்த்தையெல்லாம் எதற்கு மேனகா? நான் எதற்காக வந்திருக்கிறேன் என்று உனக்குத் தெரியாதா?'' என்று கேட்டாள்.

மேனகா சிறிது இளக்காரமாகச் சிரித்துக் கொண்டே, ''ஐயராம் விஷயமாகப் பேசுவதற்குத்தானே?'' என்று கேட்டாள்.

மேனகாவே விஷயத்தை ஆரம்பித்தது சொர்ணத்துக்குப் பெரிய நிம்மதியை ஏற்படுத்திற்று.

''ஆமாம், மேனகா. நான் அதற்காகத்தான் வந்தேன். அவன் இன்னும் சின்னப் பையன். ஒன்றும் தெரியாதவன்; எங்களுக்கு ஒரே பையன்'' என்றாள்.

மேனகா, ''ஒருத்தனே பையனானால் நான் என்ன அவனைச் சாப்பிட்டுடப் போறேனா? உங்க பையனை நீங்க தாராளமா உங்க வீட்டிலேயே வைச்சுக்கலாம். இங்கே வான்னு நானெண்ணும் அவனை அழைக்கலே. வர வேண்டாம், வர வேண்டாம்னுதான் சொல்லிண்டே இருக்கேன். - ஐயராம்! உங்க அம்மா வந்திருக்காங்க'' என்று உரக்கச் சொல்லிவிட்டு உள்ளே சென்று விட்டாள்.

ஐயராம் உள்ளேயிருந்து வந்தான். ''இங்கே ஏம்மா, வந்தே?'' என்றான்.

சொர்ணம் சீறினாள். ''நீ ஏன்டா, வந்தே? வெட்கமில்லாம என்னை வே

## திரிசங்கு சிறை!



சொன்னவர்:
எஸ். வி. சிட்டிபாபு
(பள்ளிக் கல்வி இயக்குநர்)

தகவல் : பொ. மறைமலை

அமெரிக்காவில் எட்டு மாதங்கள் கல்வித் துறை சம்பந்தமாகச் சுற்றுப் பயணம் செய்துகொண்டிருந்தேன். அப்போது இது நடந்தது:

சிகாகோவில் உள்ள பதினொன்று மாடி ஹோட்டல் அதில் நான் தங்கியிருந்தேன். வெளியில் சுற்றி விட்டு ஹோட்டலுக்குத் திரும்பிக் கொண்டிருந்தேன். இரவு மணி பதினொன்று இருக்கும்.

'லிப்டை' நாமே இயக்கிக் கொள்ள வேண்டும். லிப்டில் ஏறிக் கொண்டு பட்டனை அழுத்தினேன். லிப்ட் மேலே சென்றது. திடீரென்று 'பட்'டென்ற சத்தம். மின்சாரக் கோளாறோ என்னவோ லிப்ட் நின்றுவிட்டது!

அந்தரத்தில் நின்றுவிட்டது. 'அபாய அறிவிப்பு' பட்டனை அழுத்தினேன். அதுவும் வேலை செய்யவில்லை. எனக்கு வேர்த்துக் கொட்டியது. சுமார் ஒரு மணி நேரம் லிப்டிலேயே 'சிறை' கிடந்தேன்.

எப்போது என்னை 'விடுதலை' செய்வார்கள்?

நான் லிப்டில் ஏறும்போது நண்பர் ஒருவர் பார்த்துக் கொண்டிருந்திருக்கிறார். பிறகு லிப்டில் ஏற அவரும் முயன்றிருக்கிறார். அது இறங்காதது கண்டு நிலைகுலைந்து படிக்கட்டுகள் மூலமாக என் அறைக்கு வந்து பார்த்திருக்கிறார். நான் அங்கு இல்லாதது கண்டதும் விஷயம் புரிந்து விட்டது அவருக்கு. லிப்டில்தான் சிட்டிபாபு மாட்டிக் கொண்டுவிட்டார் என்று உணர்ந்து மெக்கானிக்கை வரவழைத்து அந்த இரவு நேரத்தில் லிப்டிலிருந்து என்னை விடுதலை செய்தார்.

கேக்கறியா? நல்ல பிள்ளையாத்தான் பிறந்திருக்கே. குடும்பத்துக்கு நல்ல கீர்த்தி உன்னுலே !''

''சரி வா, வீட்டுக்குப் போவோம்'' என்பதைத் தவிர ஜயராம் அந்த நேரத்தோடு வேறொன்றும் கூறவில்லை.

ஃ ஃ ஃ

கதவைச் சாத்தித் தாளிட்டுவிட்டு வந்து மேனகா விம்மி விம்மி அழுதாள். இது என்ன வாழ்க்கை! என்ன சுகம்! எப்பொழுதும் கவலையின் சிகரத்திலேயே காலம் கழிப்பதில் சுகம் ஏது, சாந்தி ஏது? எல்லோருக்கும் தான் ஒரு விசித்திரப் பிராணி. தனது வாழ்க்கை என்கிற உலகத்துக்கும் அவர்களின் உலகத்துக்கும் உறவே இல்லை. தான் என்ன செய்தாலும் உலகத்தின் கண்களுக்கு அது தவருகப்படுகிறது. வாய்விட்டுச் சொன்னுலும் சொல்லா விட்டாலும் தான் எல்லோருக்கும் அந்நியமானவளே.

கதவைத் தட்டும் ஓசை கேட்டது. மேனகா முகத்தைத் துடைத்துக் கொண்டு நெற்றித் திலகத்தைச் சரி செய்து கொண்டு வெளியே வந்து பார்த்தாள்.

வாசலில் நின்றிருந்தவள்—ஹரிணி !

''என்ன ஹரிணி ?''

''சும்மாத்தான் வந்தேன் அக்கா. உன்னைப் பார்த்து எவ்வளவோ நாளாச்சு. பார்த்துட்டுப் போகலாம்னு வந்தேன்.''

''சொல்லியனுப்பியிருந்தால் நானே வந்திருப்பேனே, ஹரிணி! நீ இங்கே வந்தா உன் புருஷனும் புக்காத்துக்காரர்களும் சும்மா யிருப்பாங்களா ?''

''வந்தா என்னக்கா தப்பு? அவரும் வந்திருக்கார். வெளியே கார்லேயே உட்கார்ந்திருக்கார், கூப்பிடட்டுமா?''

''அச்சச்சோ! என்னடி இது? வெளியிலா நிறுத்தி வைக்கிறது? கூப்பிடு, கூப்பிடு !''

ஹரிணி வெளியே சென்ருள். மேனகா பழக்கம் காரணமாகக் கண்ணுடியின் முன் சென்று நின்று கொண்டு கலைந்திருந்த கூந்தலைச் சரிப்படுத்திக் கொண்டாள்.

சுரேசன் ஹரிணிக்குப் பின்னுல் கைகூப்பிய வண்ணம் வந்து சோபாவின் மீது அமர்ந்து மேனகாவைப் பாராட்டும் கண்களுடன் நோக்கினுன்.

மேனகா சிரித்தபடியே, ''ஹரிணியினுல் நீங்களும் எங்க வீட்டுக்கு வந்திங்க'' என்ருள்.

''வரக்கூடாதா ?''

''அப்படி நான் எங்கே சொன்னேன் ?''

மேனகா கூறி முடிப்பதற்குள் பணியாள் தட்டில் காப்பித் தம்ளர்களை வைத்துக் கொண்டு வந்தான். சுரேசன், ''இந்த நேரத்தில் காப்பி எதற்கு?'' என்று சங்கோசப்பட்டுக் கொண்டான்.

''சாப்பிடுங்கோ. நீங்க எங்க வீட்டுக்கு வருவது அபூர்வம்'' என்ருள் மேனகா.

குங்குமம், வெற்றிலை பாக்கு வாங்கிக் கொண்டு ஹரிணி எழுந்திருந்தாள்.

''அக்கா, ஒரு வார்த்தை. இந்த மாசம் சோமசுந்தர் வருகிருராம்! அப்பா சொன்னுர்'' என்ருள் ஹரிணி.

மேனகா பதில் சொல்லவில்லை. என்றைக்கோ கழிந்து போன அந்த நாட்களைப் பற்றிய நினைவுத் திரை மீண்டும் தூக்கப்படுமென்று அவள் கற்பனையில்கூட நினைத்திருக்க வில்லை.

''வர்றேன், அக்கா!'' என்று கூறிவிட்டு ஹரிணி புறப்பட்டுச் சென்ருள்.

சோமசுந்தர்! என்றைக்கோ கண்ட கனவில் தோன்றிய மனிதன்! தனது பாழ்பட்ட வாழ்வைக் காண அவன் ஏன் வர வேண்டும் ? வரட்டும். அவனுல் தனக்கு என்ன ஆக வேண்டும்? அவன் வருகிருன் என்பதற்காகத் தான் ஏன் கலவரப்பட வேண்டும்? தான் இல்லாமல் அவன் சுகமாக வாழ முடியுமானுல், தனக்கும் அவன் தேவையில்லை. ஆயிரக்கணக்கான அந்நிய புருஷர்களில் அவனும் ஒருவன். அவனுக்கும் தனக்கும் உறவு அறுந்து போய் எவ்வளவோ வருடங்கள் ஆகி விட்டன. எவ்வளவுதான் மனத்தைச் சமாதானப்படுத்திக் கொண்டாலும், ஆர்வத்தை மறைக்க முடியவில்லை. இவ்வளவு வருடங்களுக்குப் பிறகு அவன் எதற்காக இந்த ஊருக்கு வருகிருன்? தன் பேரில் அவனுக்கும் ஆர்வம் இருக்குமோ ? கிழிந்த சொக்காயைக் கழற்றி எறிவது போலத் தன்னைப் புறக்கணித்து விட்டுச் சென்றவனுக்கு இப்போது தன் மீது என்ன ஆர்வம் இருக்கப் போகிறது? என்ன வேண்டுமானுலும் ஆகட்டும். அவனுல் தன் வாழ்வு பாழாகி விட்டது என்று மட்டும் காட்டிக் கொள்ளக் கூடாது. சுயமரியாதையைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டும். வரட்டும். அவன் வருகைக்கும் தனக்கும் என்ன சம்பந்தம் ? மேனகா மனத்தை உறுதி செய்து கொண்டாள்.

ஃ ஃ ஃ

சோமசுந்தர் ஊருக்கு வந்திருக்கும் செய்தி அவன் உறவினர்களிடையே வேகமாகப் பரவியது. அவனுக்கும் 'தன்னுடையவர்கள்' என்று சொல்லிக் கொள்ள யாரும் மிச்சமிருக்கவில்லை. பெற்றோர் என்றைக்கோ இறந்து போய் விட்டிருந்தார்கள். மேனகாவைப் போலவே அவர்களும் அவன் வருகையை எதிர்பார்த்து எதிர்பார்த்துவெகு நாட்கள் வருந்திப் பிறகு கண்களை மூடினர். இப்பொழுது அவனுக்கு இருந்தவர்கள் எல்லாம் அவன் புறக்கணித்து விட்டுச் சென்ற மனைவியின் பக்கத்தைச் சேர்ந்தவர்கள்தான். ஹோட்டலில் ஒரு சிறு அறையை வாடகைக்கு எடுத்துக் கொண்டிருந்தான். ஊருக்கு வந்து பதினைந்து நாட்கள் ஆகிவிட்டிருந்த போதிலும் மேனகா அவனை இன்னும் பார்க்கவில்லை. தேவகி ஒரு நாள் வந்து, ''மேனு, நீயும் வர்றதானு சோமசுந்தரை ஒரு நாள் டீ சாப்பிட அழைக்கிறேன்'' என்ருள்.

''நான் ஏன் வரணும் சித்தி ? எனக்கும் அவருக்கும் என்ன சம்பந்தம்?'' என்ருள்.

''என்னமோ, கிரகசார காலம் முடிஞ்சுதோ என்னவோ ? ருணுனுபந்தத்தை யார் கண்டார்கள்? வா, மேனு, என்ன ஆகிறதோ பார்க்கலாம்.''

''சித்தி, உனக்கு ஒண்ணும் புதுசல்ல. அவரால் எனக்கு எவ்வளவு அநியாயம் ஆகி

யிருக்குங்கிறது உனக்குத் தெரியும். இந்த நீண்ட காலத்து வேதனையை மாற்றப் பிரம்ம தேவனாலும் கூட முடியாது. என் கிரகசாரம் நீங்கறது நான் செத்த பிறகுதான். இப்ப அவர் வான்னு கூப்பிட்டாலும் என்னால் முடியாது. அவரை நான் பார்த்து என்ன ஆகப் போறது?'' என்று மேனகா கண்டிப்பாகக் கூறினாள்.

தேவகி வற்புறுத்தவில்லை. சோமசுந்தரையும் வீட்டுக்கு அழைக்கவில்லை.

மேனகாவுக்குச் சோமசுந்தரைப் பற்றிய செய்திகள் அவர் இவர் வாய் மூலமாக எட்டிக் கொண்டுதான் இருந்தன. அவனுக்கு விவாகமாகி இரண்டு குழந்தைகளும் இருந்தனவாம். மனைவி இறந்து போய் விட்டாளாம்; இறந்து போவதற்கு முன்பே அவன் அவளை விட்டுப் பிரிந்து போய்விட்டாளாம்; அங்கே போதிய வருவாய் இல்லாமற் போனதால் கஷ்டப்பட வேண்டி வந்தது. அதனால் இந்தியாவுக்குத் திரும்பி விட்டானாம். இப்படி எவ்வளவோ செய்திகள் மேனகாவின் காதுகளில் விழுந்தன. அவளாக யாரிடமும் ஒன்றும் விசாரிக்கவுமில்லை. தெரிந்து கொள்ள வேண்டும் என்ற ஆவலையும் காட்டவில்லை.

ஃ ஃ ஃ

மேனகா எண்ணிப் பார்த்தாள். ஹரிணியின் கணவன் அவள் வீட்டுக்கு வந்திருப்பது இது நான்காவது முறை. முதல் முறை ஹரிணியே அவனை அழைத்து வந்திருந்தாள். ஆனால் இப்படி ஹரிணி இல்லாமல் அவன் மட்டும் அடிக்கடி தன் வீட்டுக்கு வருவது மற்றவர்கள்கண்ணில் தவறுதலாகப்படலாம். இரண்டு முறை தான் வீட்டில் இல்லை என்று பொய் சொல்லி அனுப்பிச் சமாளித்தாள். ஆனால் இன்று அவன் வரும்போது அவள் வாசலிலேயே உட்கார்ந்திருந்தாள். ஒரு லம்பாடிப் பெண் அவள் கையைப் பார்த்துக் குறி சொல்லிக் கொண்டிருந்தாள்.

''உங்களுக்கு இதிலெல்லாம் கூட நம்பிக்கை இருக்கிறதா?'' என்று கேட்டபடியே வந்து சுரேசன் ஒரு நாற்காலியை இழுத்துப் போட்டுக் கொண்டு அமர்ந்தான்.

''இதிலெல்லாம் நம்பிக்கை இருந்து, இவர்கள் சொல்வதெல்லாம் நிஜமாக நடப்பதாக இருந்தால் என் வாழ்க்கையே வேறு திசையில் போயிருக்கும். என் அதிருஷ்டத்தைச் சொல்ல மற்றவா தயவே வேண்டாம்.. என்ன இந்த நேரத்திலே வந்தீங்க? இன்னிக்குக் கல்லூரி இல்லையா?''

''இல்லாம என்ன? சும்மா பார்த்துட்டுப் போகலாம்னு வந்தேன். ரெண்டு தடவை வந்திருந்தேன். நீங்க வீட்டிலே இருக்கலை.''

''ஹரிணியும் வந்திருந்தாளா?''

சுரேசன் வெறுமே தலையை மட்டும் அசைத்தான்.

குறத்தி, ''உன் கிரகசாரம் முடியப் போகுது. நல்ல காலம் தோணுது'' என்றாள்.

சுரேசன், ''நேத்து பாங்கிலே சோமசுந்தரைப் பார்த்தேன்'' என்றான்.

மேனகாவின் இதயம் 'படக்'கென்றது. குறத்தி சொன்னதற்கும் சுரேசன் சொல்வதற்கும் ஏதாவது சம்பந்த மிருக்குமோ? தன்னுடைய சுகத்துக்கும் சோமசுந்தரத்துக்கும் என்ன முடிச்சு? கேள்விக் கணைகளாகத் தொடுக்க அவள் நாத் துடித்தது. சோமசுந்தர் எப்படி இருக்கிறான்? தன்னைப் பற்றி ஏதாவது விசாரித்தானா? இனிமேல் என்ன செய்யப் போவதாக உத்தேசம்? இன்னும் எவ்வளவோ விஷயங்களைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டும் என்று அவளுக்கு ஆவல் இருந்தது. ஆனால் மேனகா வாயைத் திறக்கவில்லை. வாயைத் திறந்திருந்தால் அவள் எப்படி அந்தத் தகப்பனுருக்கு மகளாகக் கூடிய யோக்கியதையைப் பெறுவாள்?

''என் மகள் என்ன குருடா, செவிடா, நொண்டியா?—நான் அவனைக் கெஞ்சுவதற்கு'' என்று அவர் அன்று கத்தினார் அல்லவா?

ஒரு நாலணாக் காசைக் குறத்தியிடம் விட்டெறிந்து விட்டு, கொட்டாவி விட்டுக் கொண்டே, ''மன்னியுங்கள், சுரேஷ்! எனக்கு ரொம்பவும் தலை வலிக்கிறது'' என்று கூறி எழுந்திருந்தாள்.

சுரேசனும் ஏமாற்றத்துடன் எழுந்தபடி, ''போய்விட்டு வரேன்'' என்றான்.

மேனகா மனத்தை திடப்படுத்திக்கொண்டு ''ஒரு வார்த்தை சொல்கிறேன், சுரேஷ்! நீங்க தப்பாக நினைச்சுக்காதீங்க. ஹரிணியிடம் எனக்குச் சொந்தத் தங்கையை விட அதிக விசுவாசம். ஊரிலே, உலகத்திலே எல்

### கௌரவம்



ஸ்வீடனில் உள்ள எஸ்லாப் என்ற நகரில் ஒரு பள்ளியில் ஆண்டு விழாவின்போது ஒரு மாணவியைக் கௌரவிக்கிறார்கள். எப்படி? அந்த மாணவியின் தலையில் ஐந்து மெழுகுவத்திகள் பொருத்தப்பட்டு எரிய விடப்படுகின்றன. தலைமை உபாத்தியாயர் மெழுகுவத்திகளைக் கொளுத்துவார். இது ஒரு பெரிய கௌரவமாகக் கருதப்படுகிறது. -ரோடேரியன்

தகவல்: பாலி

லோரும் என்னைப் பழித்தபோது, விலக்கிய போது ஒரு நல்ல பேச்சுச் சொன்னவ என் பெரியம்மா. அவளுக்கு நான் ஒரு தீங்கும் செய்யக் கூடாது. நீங்க தயவுசெய்து இனி மேல் ஹரிணி இல்லாமல் இங்கே வராதீங்க'' என்று கூறினாள். சுரேசன் அதைக் கேட்டுத் தலையைக் குனிந்தபடி வெளியேறினான். வெளியே செல்லும்போது எதிர்ப்பட்ட ஜய ராமை வெறுப்புடன் பார்த்துவிட்டு முகத் தைத் திருப்பிக் கொண்டு சென்றான்.

ஜயராமைப் பார்த்து மேனகா, ''ஏன் ஜயராம், மறுபடியும் வந்தே?'' என்று கேட் டாள்.

''வராமல் இருக்க என்னால் முடியுமா, மேனகா?''

''உங்க அப்பா, அம்மா மனசை நோக வைக்கக் கூடாது.''

''எனக்கு இப்பொழுது அவர்களைப் பற்றிய கவனமே இல்லை. உன்னைப் பார்க்காமல் ஒரு நாள்கூடக் கழிப்பது சாத்தியமில்லை.''

''எனக்கென்னமோ ரொம்பத் தலையை வலிக்கிறது, ஜயராம்!'' என்று கூறிக் கட்டி லில் சென்று படுத்துக் கொண்டாள். ஜயராம் தனது கைக்குட்டையைத் தண்ணீரில் நனைத்து மேனகாவின் நெற்றியின் மீது வைத்தான்.

''ஏன் மேனு, உடம்பு சரியில்லையா?''

''ஒவ்வொரு நாள் எனக்கு இப்படி ஆகி றது. காலையில் குறத்தி எனக்குச் சுகமான நாட்கள் வரப் போவதாகச் சொன்னாள். அப்புறம் சுரேசன் வந்தான். வராதேன் னேன். நீ வந்தாய், உன்னையும் கேட்டேன்.''

ஜயராம் பேசாமல் கேட்டுக் கொண் டிருந்தான்.

''நீ பக்கத்திலே இருந்தா மனசு லேசாக இருக்கு. எல்லா விஷயத்தையும் உன்கிட்டச் சொல்றேன். ஆனா ஜயராம், நீ என்னை விட எட்டு வருஷங்கள் சின்னவன் இல்லையா?''

''இருக்கலாம்.''

''ஆமா, ஜயராம், சொர்ணம் மாமி இதை எத்தனையோ தடவை என்னிடம் படித்துப் படித்துச் சொல்லி யிருக்கா. உன் அப்பா அம்மா உன்பேரில் எவ்வளவோ ஆசையும் நம்பிக்கையும் வச்சிருக்கா. என்னாலே உன் வாழ்க்கை நாசமடையக் கூடாது.''

ஜயராம் தன் விரலில் அணிந்திருந்த நீலக் கல் மோதிரத்தைத் திருப்பியவாறு பேசாம லிருந்தான்.

''நான் அவ்வளவு சுயநலம் உள்ளவள் அல்ல ஜயராம். உன்னாலே என் மனசுக்கு எவ்வளவோ சாந்தி கிடைச்சிருக்கு. அதற் குப் பதிலாக நான் உனக்குக் கெடுதல் செய் யக் கூடாது. நீ இங்கே வராம இருந்தா நான் தப்பா நினைச்சுக்க மாட்டேன்.''

''நான் ரொம்பச் சுயநலவாதி மேனு. உன் சந்தோஷத்துக்காக நான் இங்கே வரலே.''

வாசலில் அழைப்பு மணி அடித்தது. ஜய ராம் சென்று வாசல் கதவைத் திறந்தான்.

பிறகு உள்ளே வந்து, ''சோமசுந்தர் வந் திருக்கார் மேனு. நீ வீட்டில் இல்லேன்னு சொல்லிடட்டுமா?'' என்றான்.

மேனகா விருட்டென்று எழுந்து உட் கார்ந்து கொண்டாள்.

''ஏன் என்ன பயம்? வரவழைத்து உட்கார வை. இதோ நான் வரேன்'' என்று கூறி எழுந்து வேறு அறைக்குச் சென்றாள்.

சோமசுந்தர் உள்ளே வந்து அமர்ந்து கொண்டான். பத்து நிமிடங்கள் அவன் காத் திருக்க வேண்டியதாயிற்று. அந்தப் பத்து நிமிடங்களை மேனகா வீணாகக் கழிக்கவில்லை. அவள் எதிரே வந்து நின்றபோது தான் கல் யாணத்தின்போது கடைசி முறையாகப் பார்த்துவிட்டுச் சென்ற மேனகாவே தன் எதிரே நிற்பது போல அவனுக்குத் தோன்றி யது. அப்பொழுது உடுத்தியிருந்த அதே நீலப் புடவையை இப்போதும் உடுத்திக் கொண்டிருந்தாள். சுருள் கூந்தலை இளக்க மாகப் பின்னிக் கொண்டிருந்தாள். ஓரிரு கூந்தல் நெற்றியில் தவழ்ந்து விளையாடிக் கொண்டிருந்தது. விசாலமான அந்தக் கண் களில் மட்டும் அப்போது நிறைந்திருந்த அவன் பேரில் உள்ள நம்பிக்கை இப்போது இருக்கவில்லை. அவைகளுக்குப் பதில் தன் னம்பிக்கையும் தைரியமும் அவைகளில் நிறைந்திருந்தன.

சோமசுந்தர் அவசரம் அவசரமாக எழுந்து நின்றான்.

''உட்காருங்கோ'' என்று கூறி மேனகா தானும் உட்கார்ந்து கொண்டாள்.

இருவரும் வெகுநேரம் ஒன்றும் பேசவில்லை. கடைசியில் மேனகாவே, ''எவ்வளவு நாள் இந்த ஊரில் தங்குவதாக உத்தேசம்?'' என்று கேட்டாள்.

''இனிமேல் இங்கேயே தங்கிடறதுன்னு நினைச்சுத்தான் வந்திருக்கேன்.''

''இவ்வளவு நாளைக்கப்புறம் இப்ப என்ன நாட்டுப் பற்று?'' — அவள் குரலில் கிண்ட லும் கேலியும் நிறைந்திருந்தன.

''பற்று ஒன்றுமில்லே. பறந்து பறந்து அலுத்துப் போன பறவை கூட்டுக்குத் தானே திரும்பணும்?''

''இவ்வளவு வருஷமா ஊர் சுத்தினதிலே வேறே கூடு ஒன்றும் அகப்படலேயா?'' அவளை அறியாமலேயே அவள் கேள்வியில் ஆவல் கலந்து விட்டது. அவன் வாயி லிருந்தே அவன் வாழ்க்கையைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற ஆர்வம் வெளிப்பட்டது.

''மேனகா, உனக்கு நான் ரொம்பவும் அநியாயம் செய்துட்டேன். முதலில் தெரி யாமல் செய்தேன். அப்புறம் தெரிஞ்சாலும் சரிப்படுத்திக் கொள்ள முடியாத பலவீனத் தின் காரணமாகச் செய்தேன். அதையெல் லாம் மறக்க முடியுமானால்...''

மேனகா எழுந்து நின்றாள். ''உங்களுக்கு இன்னும் அறுபது வயசாகல்லேன்னு நினைக் கிறேன். ஏன் அதற்குள் இப்படித் தத்துப் பித்துன்னு பேச ஆரம்பிச்சுட்டீங்க? மறக்க றதுக்கு என்ன இருக்கு? நினைவுக்காக ஒரு இன்சொல்லோ, ஒரு காதல் கடிதமோ கூட இல்லையே! மறப்பதற்கு என்ன இருக்கு? நீங்க எனக்கு ஓர் அநியாயமும் பண்ணல்லே. நான் சுகமாக இருக்கேன். ஜயராம்! அவர் புறப் பட்டுப் போனதுக்கப்புறம் வாசல் கதவைச் சாத்து'' என்று கூறி அங்கிருந்து அகன்றாள்.

தமிழாக்கம் : [illegible].

ஹரிந்தி

# மனக்குறி

அன்று ராஜகிஷோர் பாபு அத்தெருவில் உலாவ வந்தபோது, ஏனோ தெரியவில்லை, அவர் மனம் 13ம் எண்ணுள்ள வீட்டிலிருக்கும் அழகிய தம்பதிகளிடம் சென்றது. வீட்டை விட்டுப் புறப்படும்பொழுதே, அந்த இளம் கணவனும் மனைவியும் மடியில் குழந்தையை வைத்துக் கொஞ்சிக் கொண்டிருக்கும் காட்சியைப் பார்க்கப் போகிறோம் என்ற எண்ணம் மனத்தில் ஏற்பட்டிருந்தது. இந்த எண்ணம் அவரது கால்களுக்கு வேகத்தை ஊட்டியது. அருகில் நெருங்கிப் பார்த்தவருக்குத் தூக்கிவாரிப் போட்டது. என்ன இது! சோபா செட்டுகள், மேஜைகள் நாற்காலிகள், மேஜை மின்சார விளக்குகள், வண்ண வண்ணத் தலையணைத் திண்டுகள், படங்கள், தையல் மிஷின், ஜன்னல் திரைகள் போக இப்படி வீட்டுப் பொருள்கள் அத்தனையும் தெருவில் ஓர் ஓரத்தில் குவியலாகக் கிடப்பதைக் கண்டார்.

வீட்டை விட்டுப் புறப்படும்போது யாரைப் பற்றி நினைத்துக் கொண்டு வந்தாரோ, அவர்கள் கஷ்டத்தில் சிக்கியிருப்பதைக் காண அவருக்குச் சகிக்கவில்லை. யாரையும் விசாரிக்கவும் தோன்றவில்லை. அவர் கோயில் வரைக்கும் போய்விட்டார். அங்கு கோயிலில் அம்மன் சந்நிதியில் ஒரு பெண் தலை குனிந்து உட்கார்ந்திருந்தாள்.

அவர் படியேறிக் கோயிலுக்குள் சென்றபோது, காலடியோசை கேட்டு அவள் துணுக்குற்றாள். கோயிலுக்குள் பரவியிருந்த மங்கலான இருளில் அவளுடைய சிவந்த முகம் இன்னும் சிவப்பு ஏறிப் பிரகாசிப்பதைப் பார்த்தபோது கர்ப்பக்கிருகத்தில் இருக்கும் தேவியே உயிர் பெற்றுத் தம் எதிரில் வந்து நிற்பது போல் அவருக்குத் தோன்றியது. ஆனால் அடுத்த பார்வையிலேயே அவர் அவளைத் தெரிந்து கொண்டு விட்டார். பங்களாவில் குடியிருந்த அதே இளம் பெண்தான். இவரைப் பார்த்ததும் அந்தப் பெண் கோவிலை விட்டு வெளியேறலானாள். கோவில் கதவுக்கு வெளியே விருந்த வெளிச்சத்தை நோக்கி அவள் முன்னேறியபோது, கண்ணீரால் கழுவி உணர்ச்சியால் துடைக்கப்பட்ட அவளது சிவந்த முகத்தை ராஜகிஷோர் பாபு தெளிவாகக் கண்டார். இருபத்தாறு இருபத்தேழு வயதிருக்கும் அவளுக்கு. பார்ப்பதற்கு மிகவும் நல்லவளாகத் தோன்றினாள். வெளியே போய்க் கொண்டிருந்த அவளைக் கண்ட ராஜகிஷோர் பாபுவுக்கு அவளை விசாரிக்க வேண்டும் என்று தோன்றியது. கூடவே தயக்கமும் தலைகாட்டித் தடுத்து விட்டது. பெண் கோவில் படி இறங்கிக் கீழே போய்விட்டாள். அப்போதுதான் திடீரென்று அவர் வாயிலிருந்து பின்வரும் வார்த்தைகள் வெளி வந்தன: ''மகளே, நான் உன்னை ஒன்று கேட்க விரும்புகிறேன்'' என்றார். பெண் நின்றுவிட்டாள்.



'அம்ருத் ஔர் விஷ்' ஹிந்திப் புதினத்துக்காக சாகித்ய அகாதெமியின் பரிசு பெற்ற திரு அம்ருத்லால் நாகர் பிறப்பால் குஜராத்தைச் சேர்ந்தவர் என்றாலும் லக்னோவைத் தமது இருப்பிடமாகக் கொண்டு, ஹிந்தி இலக்கியத்தை வளப்படுத்துபவர். சரித்திர, சமூக நாவல்கள், சிறந்த சிறுகதைகள், நகைச்சுவைகள்- இப்படியாக எழுத்தின் எல்லாத் துறைகளிலும் தமது புகழை நிலைநாட்டிக் கொண்டவர். திரையுலகத்திலும் சிறந்த கதாசிரியராகவும், வசனகர்த்தாவாகவும் பணி புரிந்திருக்கிறார். தமிழ் 'பக்த மீரா'வை ஹிந்தி மொழியில் எடுத்தபோது, அதற்குச் சிறப்பாக வசனம் எழுதிய பெருமையும் இவருக்கு உண்டு. மனக்குறி எப்படிக் குறிபார்த்து மனத்தைத் தொடுகிறது, பாருங்கள்!



# அம்ருத்லால் நாகர்

ராஜுகிஷோர் பாபு அவள் அருகில் நெருங்கி வந்தார். ''போலீஸ்காரர்கள், உங்கள் பொருள்களைத்தான் அப்புறப் படுத்துகிறார்களா?'' என்று கேட்டார். அவள் மௌனம் சாதித்தாள். அவள் கண்கள் மீண்டும் குளமாகி விட்டன. அவள் தலையைக் குனிந்து கொண்டாள். ''உங்கள் கணவர் எங்கேயாவது வெளியே போயிருக்கிறாரா?'' என்று அவர் கேட்கவும் அவள் விக்கிய குரலில் 'ஆமாம்! ஆமாம்!' என்றாள்.

''வாடகை கொடுக்காததனால் வந்த கஷ்டமோ இது?'' என்று கேட்டார் ராஜுகிஷோர்.

முன்றானையால் கண்களைத் துடைத்துக் கொண்டே ''ஆம்'' என்றாள் அவள்.

''உங்கள் வீட்டுக்குச் சொந்தக்காரர் யார்? இந்த நகரில் பலரை எனக்குத் தெரியும். ஒருகால் உங்களுக்கு என்னால் உதவ முடியலாம். உங்கள் கணவர் வந்த பிறகே இந்த வீட்டைக் காலி பண்ணுவதுதான் எனக்கு உசிதமாகப் படுகிறது'' என்றார் ராஜுகிஷோர் பாபு.

யுவதியின் கண்ணீரும் விம்மலும் சற்று நின்றன. ராஜு கிஷோர் பாபுவை ஒரு முறை அவள் கேள்விக் குறியோடு ஏறிட்டுப் பார்த்தாள். அவள் தன்னைப் பார்த்த பார்வையிலிருந்து அவள் சொல்லொணாத் துயரத்துக்கு ஆளாகியிருக்க வேண்டும் என்று அவருக்குத் தோன்றியது. கஷ்டத்திலிருக்கும் ஓர் உயர் குடும்பப் பெண்ணுக்கு உதவ வரும் முன்பின் தெரியாத மனிதர் எவ்வளவுதான் கௌரவமானவராகத் தென்பட்டாலும் அப்பெண்ணுக்கு அவரிடம் ஏற்படுவது முதலில் அவநம்பிக்கைதான்; சந்தேகம்தான். பெண்ணின் இந்தக் கலக்கத்தை ராஜுகிஷோர் பாபு நன்கு புரிந்து கொண்டிருந்தார். அவர் சொன்னார்: ''நான் உன்னை என் மனமார 'மகளே' என்று அழைத்துள்ளேன். என் பெயர் ராஜு

கிஷோர் ஸ்ரீவாஸ்தவ்; சட்ட சபை அங்கத்தினன். இந்நகர மக்கள் அனைவரும் என்னை அறிவார்கள். இந்தக் கஷ்ட நிலையில் என் உதவியைப் பெறுவதில் சிறிதும் தவறில்லை. பார்க்கப் போனால் இந்நிலையில் என் உதவி உனக்கு அவசியம் தேவை. உன் வீட்டுச் சொந்தக்காரரின் பெயரை எனக்குச் சொல்'' என்றார்.

இளம் பெண்ணின் முகம் உணர்ச்சிக் கொந்தளிப்பால் சிவந்தது. ''யார் இந்த வீட்டுச் சொந்தக்காரரோ அவரே என்னுடைய...'' அவளால் மேலே வாக்கியத்தை முடிக்க முடியவில்லை. இரு கைகளாலும் முகத்தை மறைத்துக்கொண்டு விம்மி விம்மி அழத் தொடங்கிவிட்டாள்.

பிரச்னை மிகவும் சிக்கலானது என்பதை ராஜ கிஷோர் பாபு உணர்ந்தார். இந்தப் பெண்ணின் கணவன் இந்தப் பங்களாவின் உடைமைக்காரனா? போலீஸின் உதவியுடன் அவனே தன் மனைவியை வீட்டை விட்டு வெளியேற்றுகிறான் என்றால் இதற்கு ஏதாகிலும் காரணம் இருக்கத்தான் வேண்டும். இப்படி எண்ணும்பொழுதே அவர் மனம் 'பெண் உயர்ந்த குடும்பத்தைச் சேர்ந்தவள்தான். ஆனால் ஏதோ சிக்கலில் மாட்டிக் கொண்டு விட்டாள்' என்று வேறு விதமாகவும் எண்ணமிட்டது. தன் கணவன் மீது சொல்லி முடியாத கோபம் ஒரு புறம்; முன் பின் தெரியாத ஒருவரிடம் தன் வாழ்க்கை ரகசியத்தை எப்படி வெளியிடுவது என்ற சங்கோசம் மறுபுறம். அவளது தர்மசங்கடத்தை ராஜ் கிஷோர் பாபு உணர்ந்தார். பொதுவாக ராஜ கிஷோர் பாபு இத்தகைய சிக்கல்களிலிருந்து ஒதுங்கியே இருப்பவர்தான். ஆனால் இப்பொழுது எல்லாவற்றையும் பார்த்துவிட்டு ஒதுங்கிப் போவது என்பது முடியாத காரியமாகப் பட்டது. இன்னும் சிறிது நேரத்தில் இருண்டுவிடும். இச் சாமான்கள், இந்த அழகு, இந்த இளமையோடு இடுப்பில் கைக் குழந்தையையும் தூக்கிக் கொண்டு இவள் இந்த நேரத்தில் எங்கே போவாள்? அந்தப் பெண் பதில் சொல்லாமல் இருக்கவே, அவர் என்ன செய்வது என்று தோன்றாமல் புறப்பட்டார்.

அப்படித் திரும்பிப் போகும்போது வெளியே கிடக்கும் சாமான்களைப் பார்த்துவிட்டு அவர் உள்ளம் மீண்டும் உணர்ச்சி வசப்பட்டது. அண்டை வீட்டில் டெலிபோன் கம்பிகள் செல்வதைப் பார்த்தார். சற்றுத் தயங்கி நின்றார். வீட்டைக் காலி செய்யும் உத்தரவைக் கொண்டு வந்திருந்த சர்க்கார் சேவகனைக் கூப்பிட்டுக் காகிதங்களைப் பார்த்தார். சேவகன் பக்கத்தில் போய் நின்று கொண்டிருந்த வீட்டுக்காரரின் காரியஸ்தரை வீட்டுக்காரரின் பெயர் என்னவென்று கேட்டார். கேட்டுத் திடுக்கிட்டார். ஏனெனில் அவருக்கு இந்தப் பங்களா தமது பழைய நண்பர் விரஜ ராஜ சிங்கினுடையது என்பது இதுவரை தெரியாதிருந்ததுதான் ஆச்சரியம்.

இந்தப் பெண்ணின் சங்கடத்தைத் தற்சமயத்துக்குத் தவிர்க்கலாம் என்ற நம்பிக்கை அவருக்கு ஏற்பட்டது. பக்கத்து வீட்டுக்காரரிடம் டெலிபோன் செய்வதற்கு அனுமதி பெற்றுத் தம் நண்பருக்குப் போன் செய்தார்.

நண்பர் போனில், ''ஸ்ரீவாஸ்தவ்ஜீ! தாங்கள் இந்தச் சிக்கலில் அகப்பட்டுக் கொள்ளாதீர்கள். பங்களா இந்தக் கணமே காலியாக வேண்டும். அந்தப் பெண் எங்கே போவாள், எங்கே இருப்பாள் என்பதைப் பற்றி எனக்கு அக்கறை யில்லை'' என்று வெட்டினாற்போல் சொல்லிவிட்டார். ராஜகிஷோர் பாபுவுக்கு இதைக் கேட்டதும் கோபம் வந்தது. தமது வீட்டுக்கு போன் செய்து, தமது இளைய மகனைக் கூப்பிட்டு, ஒரு டிரக்கோ, காரோ எடுத்துக் கொண்டு உடனே தாம் இருக்குமிடத்துக்கு வருமாறு உத்தரவிட்டார்.

அவள் ஷாஜஹான்பூரைச் சேர்ந்த காலஞ்சென்ற லட்சாதிபதி வக்கீல் ஒருவரின் மகள். பெயர் ரோகிணி. அவள் தந்தை கலப்பு மணம் செய்து கொண்டவர். ரோகிணி பி.ஏ. வரை படித்திருக்கிறாள். ஷாஜஹான்பூரில் அண்டை வீட்டுக்கு வந்து போய்க் கொண்டிருந்த சிகபால் சிங்குக்கும் அவளுக்கும் காதல் ஏற்பட்டது. தன் தந்தை, தன் உற்றார் உறவினர் அறியச் சிகபால் சிங்கால் அவளை மணக்க முடியவில்லை. ரோஹிணியின் அன்னை ரொம்பவும் நோய்வாய்ப்பட்டிருந்தாள். அன்னை தன் கண்ணெதிரிலேயே தன் மகளின் கல்யாணத்தைப் பார்க்க வேண்டும் என்று விரும்பினாள். அவள் இறப்பதற்கு முந்திய நாள் ஒரு புரோகிதரை வரவழைத்து இருவருக்கும் கல்யாணம் நடந்தேறியது. சில நாட்களுக்குப் பிறகு சிகபால் தம் மனைவி ரோஹிணியை அழைத்துக் கொண்டு இங்கு வந்து சேர்ந்தார். இங்குள்ள பங்களா அவருடைய சித்தப்பா விரஜராஜ சிங்கினுடையது. முதலில் அவர் இளம் தம்பதிகளுக்கு ஆசி நல்கி உற்சாகமூட்டினார். ஆனால் சில மாதங்களாக எங்கோ ஏதோ குழப்பம் ஏற்பட்டிருந்தது. சிகபால் சிங் அடிக்கடி மனச் சோர்வுடன் காணப்பட்டார். எதிலும் பற்றுதல் இல்லாமலிருந்தார். ஐந்து மாதங்களாக வீட்டுப் பக்கம் எட்டிப் பார்க்கவில்லை. தம் குழந்தையின் முகத்தைக் கூடப் இதுவரையில் அவர் பார்க்கவில்லை. எங்கிருக்கிறாரோ என்னவோ, இதுவரை விலாசம் கூடத் தெரியவில்லை.

ராஜகிஷோர் பாபு தம் மனைவியினிடமிருந்து இந்த விவரங்களையெல்லாம் கேட்டுப் பெருத்த சிந்தனையில் ஆழ்ந்தார். ரோஹிணியின் கதை அவருக்கு விடுவிக்க முடியாத புதிராகி விட்டது.

அடுத்த நாள் காலை விரஜராஜ சிங்கின் கார் ராஜ்கிஷோர் பாபுவின் வீட்டு வாசலில் வந்து நின்றது. அவர் வருகிறார் என்ற செய்தியைக் கேட்டதுமே ராஜ்கிஷோர் யோசனையில் ஆழ்ந்தார். ரோஹிணி இங்கு வந்திருக்கிறாளென்னும் செய்தியைக்கேட்டு, 'அவளை இவர் தம் வீட்டில் வைத்துக் கொள்ளக் கூடாது; வெளியேற்றி விட வேண்டும்' என்று வற்புறுத்தவே வந்திருக்கிறார் என்று தீர்மானித்தார். முதல் நாள் டெலிபோனில் நடந்த சம்பாஷணையிலிருந்தே விரஜராஜ சிங்குக்கு ராஜகிஷோர் பாபு இவ்விஷயத்தில் தலையிடுவது பிடிக்கவில்லை என்பது தெளிவாகத் தெரிந்தது. 'அவருக்குப் பிடிக்காவிட்டால்

போகட்டுமே! அதற்காக நான் எனக்குத் தர்மம் என்று படுவதைச் செய்யக் கூடாதா?' இப்படி உறுதி பூண்ட மனத்தோடு வீட்டின் முகப்பு அறைக்கு வந்தார்.

விரஜராஜ சிங் வைரம் இழைத்த மோதிரம் பளிச்சிடக் கன்னத்தில் கையை வைத்துக் கொண்டு ஆழ்ந்த யோசனையில் இருப்பவர் போல் சோபாவில் உட்கார்ந்திருந்தார். ராஜகிஷோர் பாபுவைப் பார்த்ததும் முகத்தில் புன்னகை இழையோட ''இன்று காலை ஒரு செய்தி கேள்விப்பட்டேன். எங்கள் சிசுபாலனின் ஆசைக் கிழத்தியைத் தங்கள் வீட்டில் கொண்டு வந்து வைத்துக் கொண்டிருக்கிறீர்களாமே!'' என்றார்.

ராஜகிஷோர் பாபு மனத்துள் துணுக்குற்றார். அப்படியானால் ரோஹிணி தம்மைப் பற்றிச் சொன்னதெல்லாம் பொய்யா? சட்டென்று தம்மைச் சமாளித்துக் கொண்டு, ''ஐயா, உங்கள் வீட்டு லக்ஷ்மியை ஆசைக் கிழத்தி என்று கூறி, உங்களை நீங்களே ஏன் தாழ்த்திக் கொள்கிறீர்கள்?'' என்று கேட்டார்.

''ஸ்ரீவாத்ஸல்ஜீ! உங்களுக்குத் தெரியாதா? அவள் ஆசைக் கிழத்திதான். நீங்கள் விரும்பினால், அவள் அம்மாளை அழைத்துச் சிசுபாலனுக்கு வேலைக்காரியாக மாதம் ஐந்நூறு ரூபாய் சம்பளத்தில் நியமித்ததை நிரூபிக்கத் தயார். நன்றி கெட்டவள். வீட்டுக்குள் புகுந்து உட்கார்ந்து விட்டாள். சிசுபாலன் பாவம், நல்ல பிள்ளை. கள்ளம் கபடம் தெரியாதவன். நீங்கள் அவனைச் சந்தித்ததில்லை போலிருக்கிறது. அவனைப் பார்த்தால்...''

ராஜகிஷோர் பாபுவுக்கு ரோஹிணியை இப்படி அவமானப்படுத்துவது கொஞ்சம் கூடப் பிடிக்கவில்லை. இருந்தாலும் ரோஹிணியின் வார்த்தைகளை நம்புவதற்கோ, விரஜராஜ சிங்கின் வார்த்தைகளை நம்பாமலிருப்பதற்கோ போதிய முகாந்தரம் இல்லை. எனினும் பேச்சை உடனே வெட்டிவிட வேண்டும் என்ற எண்ணத்தில் ''ஐயா, உங்கள் சிசுபாலன் வந்து அந்தப் பெண்ணிடம் நீங்கள் சொன்னதைச் சொல்லி விட்டால் உடனே அவளை என் வீட்டிலிருந்து அகற்றிவிடுகிறேன்'' என்றார்.

விரஜராஜ சிங்கின் முகம் கடுகடுத்தது. கண்கள் சிவந்தன. ''நான் கடைசி எச்சரிக்கை செய்கிறேன். இன்று சாயந்திரத்துக்குள் அவளை உங்கள் வீட்டிலிருந்து அப்புறப்படுத்திவிடுங்கள்'' என்று கடகடவென்று பொரிந்து தள்ளி விட்டுப் புறப்பட்டார்.

''ஐயா, மிரட்டிப் பயன் இல்லை. நிரூபணம் தேவை!'' என்றார் ராஜகிஷோர்.

ராஜகிஷோர் பாபுவின் உள்ளத்தில் பெரும் அலை மோதியது. ஒரு கணம் அவருக்கே ஒரு சந்தேகம் ஏற்பட்டது. விரஜராஜ் சொல்வது உண்மையாக இருந்து விடுமோ? அடுத்த கணம் அந்தச் சந்தேகம் மறைந்துவிட்டது. அவர் மாடிக்குப் போய் மீண்டும் ரோஹிணியிடம் தோண்டித் தோண்டி விசாரித்தார். சிசுபாலனைச் சென்ற ஐந்து மாதங்களாகக் காணவில்லை என்றும், தகப்பனார் தம்மை அழைப்பதாகச் சொல்லிச் சென்றிருக்கிறான் என்றும் லக்னௌவுக்குப் பக்கத்தில்தான்

## பெண்களே! தலை குனியுங்கள்!

நீங்கள் என்ன அதிகபட்சம் அரை மணி நேரம் டெலிபோனில் பேசியிருக்கலாம். செக்கோஸ்லாவேகியாவில் உள்ள மாக்டா ஜிவாஸ் என்ற பெண் தன் சகோதரியிடம் டெலிபோனில் இருபத்து ஆறரை மணி நேரம் இடைவிடாமல் பேசி ஒரு ரிக்கார்டு ஏற்படுத்தி யிருக்கிறாள்!



'சாஜி' - டிட்பிட்ஸ்

அவர் தகப்பனார் வீடு இருக்கிறது என்றும் சிசுபால் சிங் அங்குதான் போயிருக்க வேண்டும் என்றும் தெரிய வந்தன.

விசாரித்ததில் ராஜகிஷோர் பாபுவுக்கு மற்றொரு விஷயமும் புலப்பட்டது. ஷாஜஹான்பூர் ஜில்லாவில் ஒரு பணக்கார மாது, அபயராஜ் சிங்கிடம் மையல் கொண்டு தன் சொத்தை யெல்லாம் அவருக்கு எழுதிவைத்தாள். அந்த உயில் எழுதின கொஞ்ச நாட்களுக்கெல்லாம் அவளுக்கு விஷம் கொடுத்துக் கொன்றுவிட்டார்கள்.

இப்பொழுது ராஜகிஷோர் பாபுவுக்கு விஷயம் தெளிவாகப் புரியலாயிற்று. சிசுபால் சிங்கின் தந்தையான அபயராஜும் சித்தப்பாவான விரஜ ராஜும் பணத்தாசை பிடித்த ராட்சதர்கள். அவர்கள் ரோஹிணியையும் அப்படிக் கொன்றுவிடப் பார்க்கிறார்களோ என்னவோ என்று எண்ணினார் ராஜகிஷோர் பாபு. இருந்தாலும் ஷாஜஹான்பூர் போய் முழு விவரம் விசாரித்து விட்டு வரவேண்டும்; முடிந்தால் சிசுபால் சிங்கின் விலாசம் தெரிந்து வர வேண்டும் என்று நினைத்தார்.

ரோஹிணி சொன்னாள்: அவரை ''வலுக்கட்டாயப்படுத்தி என்னிடம் வரவிடாமல் தடுக்கிறார்கள். அவர் என்னைப் பார்க்கத் துடித்துக் கொண்டிருக்கிறார் என்று என் உள்ளம் கூறுகிறது.''

கணவன் தன்னைக் காண விழையும் ஆர்வம் அவள் முகத்திலும் கண்களிலும் அப்படி உயிர் பெற்றுப் பிரகாசித்தன!

* * *

குழந்தைக்குக் கடும் ஜுரம் ஏறியிருந்தது. ரோஹிணி, குழந்தையின் தலைமாட்டில் உட்கார்ந்து தண்ணீரில் நனைத்த ஈரப் பட்டியையும், யூடிகலோன் நீரில் நனைத்த துணியையும் மாற்றி மாற்றி நெற்றியில் போட்டுக் கொண்டிருந்தாள். அவள் முகம், சிலையில் அடித்த முகம் போல் சலனமற்றிருந்தது. ராஜகிஷோர் பாபுவின் நடுப் புதல்வன் வினயன் டாக்டரை அழைத்து வந்தான். ரோஹிணிக்குப் புத்துயிர் வந்தது போலிருந்தது. டாக்டர் குழந்தையைப் பரிசோதித்தார். பிறர் தன் உடலைத் தீண்டுவது பிடிக்காமல் குழந்தை முனகியது. ரோஹிணி முனகலைக் கேட்டுக் குழந்தையின் பக்கம் திரும்பினாள். நோய்வாய்ப்பட்ட குழந்தைக்குப் பதில் குழந்தையின் தந்தை படுத்திருப்பது போல் அவளுக்குத் தோன்றியது. குழந்தையின் சார்பில் ரோஹிணிக்குத் தன் கணவனிடம்

பரிவும் பாசமும் ஏற்பட்டன. கண நேரம் நோயுற்ற தன் குழந்தைக்குச் சிசுருஷை செய்கிறோம் என்பதையே அவள் மறந்து விட்டாள். அவளுக்குத் தன் கணவனே நோயுற்றிருப்பதாகத் தோன்றியது. டாக்டர் குழந்தையைப் பார்த்துவிட்டு, ''ஆச்சரியமாக இருக்கிறதே! இந்தக் குழந்தையின் நாடித் துடிப்பு, இதயம் எல்லாம் சரியாக இருக்கின்றன. மார்பு, வயிறு, எங்கும் எந்தக் கோளாறும் இருப்பதாகத் தெரியவில்லை. குழந்தையின் தேக ஆரோக்கியத்தில் ஏதாகிலும் குறை ஏற்பட்டிருப்பதாகவும் தெரியவில்லை. டெம்பரேச்சர் கூட நார்மலாகத் தான் இருக்கிறது. இருப்பினும் உடல் ஏனோ இவ்வளவு சூடாக இருக்கிறது. குழந்தை மூர்ச்சையுற்றுக் கிடக்கிறான். இத்தகைய கேஸ் ஒன்றைக்கூட இதுவரை நான் பார்த்ததில்லை'' என்றார்.

டாக்டரின் ஒவ்வொரு வார்த்தையும் ரோஹிணியின் காதுகளில் தெளிவாக விழத்தான் செய்தது. இருப்பினும் அவளுக்கு எவ்வித வியப்பும் உண்டாகவில்லை. அவளுக்கு எல்லாம் பொய்யாகப் பட்டது. குழந்தையின் ஜுரம் பொய்; கணவன் தன்னைக் கைவிட்டான் என்று வந்த வார்த்தைகள் பொய். அவள் கணவன் எங்கோ நோயுற்றுக் கிடக்கிறான்; எங்கோ முனகிக் கொண்டிருக்கிறான். எங்கே என்பதுதான் புரியவில்லை? அவன் எங்கே? அவன் எங்கே? ரோஹிணியின் அறிவில் ஏற்பட்ட தெளிவுக்கும், உள்ளத்தில் ஏற்பட்ட கேள்விக்கும் இடையில் பின்னிப் பிணைந்தவாறே தன் இருப்பிடத்தை விட்டுத் திடீரென்று எழுந்து நின்றாள். வாசல் வரைக்கும் வந்து விட்டாள். அப்போது வினயன், ''அக்கா, குழந்தையை ஆஸ்பத்திரிக்குக் கொண்டு போகும்படி டாக்டர் சொல்லுகிறார். எடுத்துக் கொண்டு போகட்டுமா?'' என்று கேட்டான். வாசல்படியில் வலது காலை வைத்துக் கொண்டே, ''உங்கள் இஷ்டம் போல் செய்யுங்கள்'' என்று கூறி விட்டு வீட்டை விட்டு வெளிப்பட்டாள். வீங்கிய கண்களும் வேகமான நடையுமாக ரோஹிணி நடக்கலானாள். அப்பொழுது மந்திரத்தால் இயங்கும் கற்சிலையெனத் தோற்றமளித்தாள். படிகளைப் பார்க்காமலே தடதடவென இறங்கிப் போனாள். கீழே ராஜகிஷோர் பாபுவின் பெரிய மாட்டுப்பெண் காய்கறி நறுக்கிக் கொண்டிருந்தாள். அவளுடைய குழந்தை, ரோஹிணியைப் பார்த்து விட்டு, ''அத்தை! எங்கே போய்க் கொண்டிருக்கிறாய்?'' என்று மழலை மொழியில் கேட்டவாறே பின்னால் ஓடியது. ரோஹிணி தன்னையறியாமலே குழந்தையின் தலையை இடது கையால் வருடிவிட்டு மேலே நடந்தாள். வீட்டு முற்றத்தைக் கடந்து முன் வாசலைக் கடந்து கதவைத் திறந்து கொண்டு தெரு வாசலுக்கு வந்து விட்டாள். யாரோ ஜாடை காட்டி அழைப்பது போன்ற உணர்வில், அதற்குக் கட்டுப்பட்டவளாகக் குறிப்பிட்ட திசையை நோக்கி நடக்கலானாள்.

ரோஹிணி சென்ற கொஞ்ச நேரத்துக்கெல்லாம் ராஜ் கிஷோர் பாபு, ரிக்ஷாவில் வந்து வீட்டு வாசலில் இறங்கினார்.

வீட்டுக்குள் நுழைந்ததும் நுழையாததுமாக ரோஹிணியைக் கூப்பிட்டார். ''இப்பொழுது இங்குதானே இருந்தாள்?'' என்று சொல்லிக் கொண்டே அவர் மனைவியும் குரல் கொடுத்தாள். பிறகு தேடத் தொடங்கினார்கள். மூத்த மருமகள் சொன்னாள்: ''மாடியிலிருந்து ரோஹிணி இறங்கி வந்தாள். வாசற் பக்கம் போனாள். முன் வாசல் அறைக்குப் போகிறாள் என்று அல்லவோ நினைத்தோம்'' ராஜகிஷோர் பாபுவுக்குத் திக்கென்றது... அவர் அப்பொழுதுதான் ஷாஜஹான்பூரிலிருந்து அவன் தாய், தந்தை, விவாகம் ஆகியவற்றைப் பற்றிய முழு விவரங்களும் நிரூபணங்களும் கொண்டு வந்திருந்தார். ஆனால் இங்கேயோ ரோஹிணியையே காணவில்லையே! எங்கே போய்விட்டாள்? யாரும் அவளைக் கடிந்து கொள்ளக் கூட இல்லையே! இருந்தும் மறைந்து விட்டாளே! இப்படிச் செய்ய வேண்டும் என்று அவளுக்கு ஏன்தான் தோன்றியதோ, தெரியவில்லை. ரோஹிணி காணவில்லை என்ற சமாசாரம் தெரிந்ததும், அவள் குழந்தையைச் சாக்கிட்டு, அவளுடைய மாமனார்கள் ஏதாகிலும் சட்ட மன்ற வழக்குத் தொடுத்துத் தொல்லை தருவார்கள். அதை ராஜகிஷோர் பாபுவினால் சரியாகச் சமாளிக்க முடியாமல் போகும். குழந்தையின் உடல்நிலையும் சரியாக இல்லை. என்ன ஆகுமோ, சொல்ல முடியாது. இதனிடையில் ரோஹிணியும் தன் தந்தையின் சொத்து விஷயத்தில் ஏமாற்றப்படாமல் இருக்கவேண்டுமே! டாகுர் விரஜ ராஜ சிங், தான் அவமானப்பட்டதற்குப் பழி வாங்க ராஜகிஷோர் பாபுவை அவமானப்படுத்தப் பார்க்கலாம். ஆனால் அப்படி அவமானப்படுத்தும்படியாக ராஜ கிஷோர் பாபு ஒன்றும் செய்யவில்லை. ஆயினும் பணக்காரர்களை எப்படி நம்புவது?

ராஜகிஷோர் பாபு சிந்தனையில் மூழ்கி விட்டார். இருந்தாற்போல் அவரது கண்களின் எதிரில் ரோஹிணியின் உருவம் குதித்துக்கொண்டு வந்து நிற்கும். சென்ற ஒன்றரை இரண்டு ஆண்டுகளாகத் தூரத்திலிருந்து ரோஹிணியையும் சிசுபாலனையும் பார்த்த காட்சி அவர் கண் முன் வந்து நிற்கும். பிறகு ஜுரத்தில் அவதிப்படும் குழந்தையின் நினைவு வரும். அதைத் தொடர்ந்து சிந்தனை: 'அடடா, இதென்ன கஷ்டம்! இந்த ரோஹிணி சொல்லாமல் கொள்ளாமல் எங்கே போயிருப்பாள்?

ரோஹிணியோ ஏதோ மந்திரவசப்பட்டவள்போல் சென்று கொண்டிருந்தாள். நகரத்தின் எல்லையை அடைந்து விட்டாள். பொழுது சாய்ந்து விட்டது. ஆயினும் ரோஹிணி தன் பாதைக்கு இதுவரை முடிவு காணவில்லை. அவள் நகரத்தின் கூட்டம் நிறைந்த தெருக்களில் சென்று கொண்டிருந்தபோது, அவளுடைய அழகினால் கவரப்பட்டு நூற்றுக் கணக்கான கண்கள் அவளை மொய்த்தன. ஆனால் யாருக்கும் அவளிடம் எவ்விதச் சந்தேகமும் ஏற்படவில்லை. ரோஹிணிக்கோ ஒரே குறி. அவள் கண்கள் தொலைவில் பிறர் கண்களுக்குப் புலனாகாத பொருளைக் குறி வைத்துக் கொண்டே சென்றன. கால்கள் ஏதோ இனம் விளங்காத வட்டி

# இவ்வளவு அமோக விளைச்சலுக்கு உதவியது எது?





## புத்திசாலியான விவசாயி விவேகமாகத் தேர்ந்தெடுத்த ஓர்த்திங்டன்-சிம்ப்ஸன் பம்ப செட்

**விஷயமறிந்த விவசாயிகள்
பெஸ்ட் அண்ட் கம்பெனி
தயாரிக்கும் நம்பகமான
ஓர்த்திங்டன்-சிம்ப்ஸன்
பம்பு செட்டுகளையே
கேட்டு வாங்குகிறார்கள்.**

ஈடு இணையற்றது என்று புகழ் பெற்ற 'மானோபிளாக்' பம்பு செட்டுகள் உட்பட பலவகை சென்டிரிப்யூகல் பம்புகளையும் **பெஸ்ட்** அளிக்கிறது. ஓர்த்திங்டன்-சிம்ப்ஸன் பம்பு செட்டுகள் கண்டிப்பான தரக்கட்டுப்பாட்டுடன் தயாரிக்கப்படுபவை. விற்பனைக்குப் பிறகும் சேவை செய்ய, நாடெங்கும் ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன. மேலும், தக்க பம்புகளை தேர்ந்தெடுப்பதற்கு ஆலோசனைகளையும் அளிக்கிறது, **பெஸ்ட்!**





**பெஸ்ட் & கம்பெனி
பிரைவேட் லிட்.**

(ஸ்தாபிதம் : 1879)
13/15, நார்த் பீச் ரோடு, சென்னை-1

தமிழ் நாட்டில கிளைகள்:

6/434, திருச்சி ரோடு, கோயமுத்தூர்
49-D, மதுரை ரோடு, திருச்சி-1.

Focus.BC.192 Tamil

யத்தை நோக்கி அவளை ஒரே கதியில் இட்டுச் சென்றன. யாருடைய 'மெஸ்மரிஸ' சக்தியிலோ அவள் இயங்கிக் கொண்டிருப்பது போல் தோன்றியது. அது யாருடைய சக்தி என்பது அவளுக்குத் தெரியாது. அவள் எங்கு போய்க் கொண்டிருக்கிறாள் என்பதும் தெரியாது. அவள் தன் குழந்தை, தன்னைச் சுற்றியுள்ள உலகம் எல்லாவற்றையுமே மறந்திருந்தாள். ஏன், தேசம், காலம் பற்றிய நினைவு கூட அவளுக்கு இல்லை. அவளுடைய மனக் கண்களுக்கு ஏதோ ஓர் உருவம் தெரிகிறது. அவளுடைய சிசுபாலன் ஜுரமுற்று, உணர்விழந்து கண்களை மூடியவண்ணம் கிடக்கிறான். இடை இடையே தெளிவில்லாத வார்த்தைகளில் ''ரோஹிணி வா, ரோஹிணி வா'' என்று அழைக்கிறான். இந்த 'வா, வா' என்ற குரல் ஒலிதான் அவள் நடையின் வேகத்தைத் தூண்டுகிறது.

நகர எல்லை கடந்தாகி விட்டது.

பகல் பொழுது மறைந்து மாலை வந்தது. பறவைகளின் கூட்டம் இறகுகளைப் படபட வென்று அடித்துக் கொண்டு பறந்து வந்து மரங்களில் அமர்ந்தன. மெள்ள மெள்ள எங்கும் அமைதி பரவியது. நாய்களின் குரைப்பு அங்கு நிலவிய பயங்கரத்தை அதிகப்படுத்தியது. ரயில்வே 'கிராஸிங்' கேட் வந்தது. ஓடையின் மதகடி வந்தது. மதகின் மேல் இருவர் உட்கார்ந்திருந்தனர். அவர்களில் ஒருவன், ''அம்மா! அம்மா!'' என்று குரல் கொடுத்தான். ரோஹிணியின் காதுகளில் அந்தக் குரல் விழவில்லை. ஒருவன் படக்கென்று எழுந்திருக்கிறான். ரோஹிணி அழகாக இருக்கிறாள். ஆதரவின்றித் தனியாக வருகிறாள். இதைக் கண்டதும் அந்தக் கிராமத்துக் காளையின் கண்களில் ஓர் உற்சாகம் பிறந்தது.

''எங்கே புறப்பட்டீங்க ராணியம்மா?'' என்று கேட்டுக் கொண்டே அவள் கரம் பற்றத் தன் கையை நீட்டினான் அவன்.

''சிசுபால் சிங்கிடம் போக வேண்டும்! சிசுபால் சிங் எங்கே இருக்கிறார்? அவர் மாளிகை எவ்வளவு தூரம் இருக்கும்?'' இதைக் கேட்டதும் காளையின் முக பாவத்தில் ஒரு மாற்றம். ரோஹிணியின் கண்களிலோ பயமில்லை; ஐயமில்லை.

''சிசுபால் அண்ணன் வீட்டுக்கா?'' என்று அடக்க ஒடுக்கமாகக் கேட்டான் இளங்காளை.

''ஆம்.''

''வாருங்கள்!''

அவன் தன்னுள்ளிருந்த அத்தனை மிருகத் தன்மையையும் மறந்து, ரோஹிணிக்கு ஒரு கஜம் முன்னால் சென்று மரியாதையாக அழைத்துப் போனான். நல்ல இருள்! அந்த இருட்டிலும் ரோஹிணியின் சௌந்தரியம் கண்ணைப் பறித்தது. அவளுடைய தனித்த உயர் பண்பு என்னும் அங்குசம் அந்த மனித மிருகத்தை அடக்கியாண்டது. அவனுக்குத் தெரியாது, அந்தப் பெண் யாரென்று. ஆனால் அவளை ஒரு தடவை ஏறிட்டுப் பார்த்தவுடனே ஜ்வாலை வீசும் அக்னி குண்டத்தில் தான் விழ முயன்றதாக அவனுக்குத் தோன்றியது. எஜமானரின் பெயரைக் கேட்டதுமே அவன் தன் சுய நினைவைப் பெற்றான். நாகரிகமாக நடந்து கொண்டான். அவளுடைய கட்டளையைத் தாங்கி நடக்கும் அடிமையாகி விட்டான். அந்த அளவுக்கு ரோஹிணியின் குரலில் உறுதியிருந்தது. அடர்த்தியான புதர்களிடையில் சென்ற ஒற்றையடிப் பாதை வழியாகச் சென்று கொண்டே அவன் ''நம் சின்ன எஜமானுக்கு (சிசுபாலுக்கு) சென்ற ஏழெட்டு நாட்களாக உடல் நலமே சரியாக இல்லை. நேற்று நாலாம் ஜாமத்திலிருந்து ரொம்பவும் கெட்டுப் போய் விட்டது. டவுனிலிருந்து இரண்டு பெரிய டாக்டர்கள் வந்து உட்கார்ந்திருக்கிறார்கள். நர்ஸ் வேறு போட்டிருக்கிறார்கள். சின்ன எசமான் விரஜராஜ சிங்கும் வந்திருந்தார். ஏதோ அவசர காரியமாக இன்று மத்தியானம்தான் டவுனுக்குத் திரும்பிப் போயிருக்கிறார். திவானும் வந்திருக்கிறார். பெரிய எசமானும் வரப் போகிறார் என்று சொல்லிக் கொள்கிறார்கள்'' என்றான்.

அரை பர்லாங் தூரம் அவன் பேச்சில் கடந்துவிட்டது. எதிரில் — அந்த இருளில் ஒரு வெண்ணிற ஒளி தென்படவே, ரோஹிணியின் நடை வேகம் கொண்டது. அவள் மாளிகையின் பின்புறமிருந்து முன் பக்கம் வந்தாள். கறுந்தகாரத்திலிருந்து மின்சார ஒளிக்கு வந்து சேர்ந்தாள். மாளிகையின் வாசலைக் கடந்து உள்ளே போனான். அவளை அழைத்து வந்தவன், ''அம்மா, வாருங்கள்! தாயே, வாருங்கள்!'' என்று மரியாதையுடன் கூறவே வாயில் காப்போன், மற்றப் பணியாட்கள் யாருக்கும் ரோஹிணியை 'இவள் யார்' என்று விசாரிக்கத் தோன்றவில்லை. அவளுடைய ஒளிபடைத்த அழகிய முகமும், அவளுடைய நடை, உடை, பாவனையும் பார்ப்பவரை மரியாதை கொள்ளச் செய்தன. மாடிப் படி ஏறியதும், வழி காட்டி வராந்தாவிலேயே நின்றுவிட்டான். அங்கிருந்து நேரே வராந்தாவில் நடந்து திரும்பிப் போகுமாறு சொன்னான் ரோஹிணிக்கு. அவன் சொல்லா விட்டாலும் ரோஹிணி நில்லாமல் மேலே

## பெண் மொழிகள்

■ பெண்களால் உலகம் அழிந்ததுண்டு. உண்மை தான்! ஆனால் அழிவிலிருந்து உலகைக் காப்பாற்றுபவர்களும் பெண்களே என்பதை மறந்துவிடாதீர்கள்!

- கவியரசி சரோஜினிதேவி.



■ பெண்ணொருத்தி தனக்குப் பிள்ளையொன்று பிறக்கும் வரை காதல் என்றால் என்ன என்பதையே அறிவதில்லை. - பிராய்டு.

■ ஒருவனைக் காதலிக்கும் போது அவனது தீச்செயல்களைக் கூட மன்னித்துவிடும் பெண்கள் - காதலிக்காதபோது நல்லவைகளைக்கூட மதிப்பதில்லை.

- பால்ஸாக்.

தகவல் : தேஜ்

நடந்து செல்பவன்தான். அங்கு அடித்த காற்றே தன் காதலன் இருக்கும் இடத்தைக் காட்டிக் கொடுத்தது. வேகமாகவே அடி எடுத்து வைத்தவள் ஓடவே செய்தாள்.. அவன் வராந்தா முடியச்சென்று திரும்பினான். அங்கிருந்த அறையில் நுழைந்தாள். அந்த அறையில் நர்ஸ் ஒருத்தி இருந்தாள். டாக்டர் இருந்தார். பெரிய பெரிய வெள்ளிச் சட்டம் போட்ட நிலைக் கண்ணாடிகள் இருந்தன. சலவைக் கல் மேடை இருந்தது. நோயாளியின் தலைப் பக்கத்துக்குப் பின்னால் வெளிச்சம் இருந்தது. ரோஹிணியின் கண்கள் இவையொன்றிலும் பதியவில்லை. அவளுக்கு அவளுடைய சிசுபாலன் ஒருவன்தான் கண்ணில் பட்டான். தன் நோயுற்ற குழந்தையில் எந்த உருவத்தைக் கண்டாளோ, அதே உருவம்! எந்த முனகல் சத்தத்தைக் கேட்டாளோ, அதே முனகல் சத்தம்! கடந்த ஆறு மணி நேரமாக விடாமல் அவளை இழுத்து வந்த தோற்றமும் குரலும் இப்போது பிரத்யட்சமாக நேருக்கு நேர் அவள் கண் முன்னே தோன்றின. அதே குரலில் அவளை, "ரோஹிணி, வா! ரோஹிணி! ரோஹிணி! வா, வா!" என்று அழைக்கும் முனகலையும் கேட்டாள்.

ரோஹிணி துள்ளிப் போய் அவன் தலைமாட்டில் உட்கார்ந்தாள். குனிந்து தன் இரு கரங்களையும் அவன் கழுத்தில் மாலையாகக் கூட்டி, "இதோ வந்து விட்டேன்" என்றும் குரல் கொடுத்தாள்.

நர்ஸும் டாக்டரும் ஒன்றும் புரியாமல் திகைத்தார்கள். திவான் விஷயம் புரிந்து திகைத்தார். இந்த ரோஹிணியின் காரணமாகத்தானே சிசுபாலன் இங்கு ஐந்து மாதங்களாகக் காவல் கைதியாக இருக்கிறான்! இவள் காரணமாகத்தானே சித்தப்பாவுக்கும் பிள்ளைக்கும் இடையே வார்த்தைகள் தடித்தன! திவான் அவளை இங்கு இருக்க விட்டால் எஜமானர்கள் கோபித்துக் கொள்வார்கள். ஆனால் இந்தக் குட்டி எஜமானரோ நேற்று சாயங்காலத்திலிருந்து இவள் பெயரை அல்லவோ ஓயாமல் ஜபித்துக் கொண்டு வருகிறார்? இவளை அப்புறப்படுத்தினால் இவர் உயிருக்கு ஆபத்து ஏற்படக் கூடுமே!

ரோஹிணி குனிந்து, சிசுபாலனின் காதுகளில் "இதோ பாருங்கள்! நான் வந்துவிட்டேன்! கண்களைத் திறந்து பாருங்கள். கண்களைத் திறவுங்களேன்" என்று சொல்லிக் கொண்டே இருந்தாள். உணர்விழந்த சிசுபாலனின் முகத்தில் இலேசாக உணர்வு திரும்பியது. முனகலும் சற்றுக் குறைந்தது. கண்கள் மெள்ள மெள்ளத் திறந்து கொண்டன. மங்கல் நீங்கி ரோஹிணி அவன் கண்களுக்குத் தென்பட்டாள். இருவர் கண்களும் சந்தித்துக் கொண்டன.

டாக்டர் மன நிம்மதி பெற்றுத் திவானின் பக்கம் திரும்பிப் புன்னகை புரிந்தார். திவானும் டாக்டரின் புன்னகையைப் பார்த்துச் சிறிது உற்சாகமுற்றார்.

அதே இரவு இரண்டு மணி நேரத்துக்குப் பிறகு ரோஹிணி, ராஜகிஷோர் பாபுவுக்கு டெலிபோன் செய்து, தானும் தன் கணவரும் சௌக்கியமாக இருக்கும் மகிழ்ச்சியைச் செய்தியாகச் சொன்னாள். அப்படியே தன் குழந்தையின் நலத்தையும் விசாரித்தாள். குழந்தை முற்றிலும் குணமடைந்து விட்டது. ஜுரம் கூட இரண்டு மணி நேரத்துக்கு முன் நார்மலுக்கு வந்து விட்டது என்று தெரிய வந்தது. நாளைக் காலையில் குழந்தையை லக்ஷ்மண்கோட்டுக்குக் கொண்டு வந்துவிடுவதாகச் சொன்னார் ராஜகிஷோர் பாபு. அத்துடன் அவர் டெலிபோனில் பல தடவை "ரோஹிணி! நீ அங்கு எப்படிப் போய்ச் சேர்ந்தாய்? இடம், விலாசம் எல்லாம் எப்படித் தெரிந்தன?" என்று கேட்டார். ரோஹிணி திரும்பத் திரும்ப கூறிய பதில் ஒன்றுதான்: "மனத்தினால் பாதையை அறிந்தேன். மனமே என்னை இங்கு கொண்டு வந்துவிட்டது."

ராஜ்கிஷோர் பாபுவுக்கு இரவெல்லாம் சரியாகத் தூக்கமே வரவில்லை. இது எப்படி நடக்கும்? ஒரு ஜீவன் மற்றொரு ஜீவனை இப்படிக்கூட ஆகர்ஷிக்க முடியுமா? அதோடு குழந்தையின் ஜுரம் கூட டாக்டருக்குப் பெரும் வியப்பை அல்லவா அளித்தது? அப்படியானால் தந்தையின் வேதனையின் நிழல் குழந்தை மீது படிந்ததா, என்ன? குழந்தையின் ஜுரம் மூலமாக ரோஹிணிக்கு ஒரு மனக் குறி சொல்லவே, குழந்தைக்கு ஜுரம் வந்திருக்குமா? அது எப்படி சாத்தியம்? தமது கண்ணுக்கு எதிரே இந்த அதிசயம் நடந்திருக்காவிட்டால், ராஜ்கிஷோர் பாபு நம்பியிருக்க மாட்டார். ஆனால் இப்பொழுது நம்புவதைத் தவிர வேறு வழி?

மறு நாள் காலை சுமார் ஒன்பது ஒன்பதரை மணிக்கு ராஜ கிஷோர் பாபு குழந்தையை எடுத்துக் கொண்டு லக்ஷ்மண் கோட்டுக்குச் சென்றார். சிசுபால் சிங் முதல் தடவையாகத் தன் குழந்தையைப் பார்த்தான். பார்த்ததுமே புத்துயிர் பெற்றான்.

ராஜகிஷோர் பாபுவிடம், இரண்டு ஜமீன்தார்களுமே, ரோஹிணியைக் குட்டி எஜமானரிடம் இருக்க அனுமதித்து விட்டார்கள் என்று திவான் சொன்னார். ராஜ்கிஷோர் இந்த நற்செய்தியை ரோஹிணிக்குத் தெரிவித்தார். பிறகு அவளிடமிருந்து விடைபெறு முன் மீண்டும் ஒரு முறை கேட்டார்: "ரோஹிணி, உண்மையைச் சொல்! உனக்கு வழி யார் சொன்னார்கள்?"

"உண்மையையே சொல்கிறேன். இவருடைய 'வா, வா' என்ற குரலே எனக்கு வழி சொல்லியது. இங்கே கொண்டு வந்தும் விட்டது. எத்திசையிலிருந்து குரல் வந்ததோ அந்தத் திசையை நோக்கியே நடந்தேன்" என்றாள் ரோஹிணி.

ராஜகிஷோர் பாபுவுக்கு மூளை வேலை செய்ய மறுத்து விட்டது. இந்த ரகசியத்தின் அடி — நுனி அவருக்குக் கிடைத்தால்தானே?

தமிழாக்கம்: எஸ். வி. எஸ்.

ஐந்தே
காசு
போதும்
உங்கள்
குடும்பம்
பெருகாமல்
தடுக்க!







உயர்தர ரப்பரிலான கருத்தடைச் சாதனம்

**குடும்பக் கட்டுப்பாட்டிற்கு**

15 காசுக்கு 3

அரசாங்க ஆதரவிலும் குறைந்த விலை

**வேண்டுமென்றபோது மட்டுமே பேறு...**

வேண்டுமென்றபோது மட்டுமே இன்று மக்கட்பேற்றை ஏற்படுத்திக் கொள்ளலாம். இதற்கு நிரோத் உதவும்.

**தாய் சேய் இருவரின் தேகநலம்...**

குழந்தைகள் சரியான வளர்ச்சி பெற, முதல் மூன்று நான்கு வருடங்கள் அவர்களுக்கு விசேஷமான பராமரிப்பு தேவை என்று வைத்தியர்கள் கூறுகின்றனர். பேற்றில் இழந்த தேக வலுவை மீண்டும் பெற தாய்க்கும் சிறிது காலம் பிடிக்கும். நிரோத் உபயோகிப்பதனால், அடுத்த பேற்றைச் சுலபமாகத் தள்ளிப் போடலாம்.

நிரோத் (காண்டோம்) உயர்தர ரப்பரிலான கருத்தடைச் சாதனம் ஆண்களுக்கானது. எளிமையான, தீமையற்ற நிரோத் உலகமெங்கும் உபயோகிக்கப்படுகிறது. இதை உபயோகிப்போரின் தேகநலம் பாதிக்கப்படுவதில்லை. நிரோத் எங்கும் கிடைக்கும்

நிரோத், வீட்டுச் சாமான்கள் விற்கும் கடை, மருந்துக் கடை, வெற்றிலைப் பாக்குக் கடை ஆகியவற்றில் கிடைக்கும்.

davp 70/67

## பட்டு மாமா — சிட்டு மாமி

"ஏது! சட்டைப்பை இன்னைக்குக் கனக்கிறாப்போலிருக்கே!"

"உன் கண்ணுலே பட்டுடுத்தா அது? ராமசாமி கடனுக வாங்கித் திருப்பிக் கொடுத்த பணம்! வேறே ஒண்ணுமில்லே!"

"பின்னே என்ன, நீங்க நிஜலிங்கப்பாவா? பெயரைச் சொல்லாமலேயே யாராவது பணம் கொடுத்துக் கொண்டிருக்க?"

## மிஸ்டர் பாய்காட்டின் வினை

பகிஷ்கரிப்பு, விலக்குதல், ஏற்றுக்கொள்ளாமலிருத்தல், ஒதுக்குதல் முதலிய பதங்களை ஆங்கிலத்தில் 'பாய்காட்' (BOYCOTT) என்று குறிப்பிடுகிறோம். இந்த ஆங்கில வினைச் சொல் தோன்றிய விதம் பற்றி ஒரு விசித்திர வரலாறு உண்டு. சார்லஸ் பாய்காட் என்னும் ஆசாமி தம் நிலங்களுக்கான வாடகையையும் குத்தகைப் பணத்தையும் ஐரிஷ் குடியானவர்களிடமிருந்து வசூலிக்க வேண்டியிருந்தது. வசூல் விகிதமோ அதிகம். இதனால் ஆத்திரமடைந்த குடியானவர்கள், அந்த ஆசாமியைக் கூட்டாக பகிஷ்கரிக்க ஆரம்பித்தார்கள். அந்த ஊரில் எந்தவிதமான சாமானும் பாய்காட்டுக்குக் கிடைக்காமல் செய்தார்கள். இதிலிருந்து பகிஷ்கரிப்பு என்ற செயலுக்கும் பாய்காட்டின் பெயரே வந்துவிட்டது.

## குடும்ப சித்திரம்

என்னுடைய அப்பா - அவர்
என்றும் அணிவார் ஜிப்பா.

என்னுடைய அம்மா - அவள்
எதுவும் தருவாள் சும்மா.

என்னுடைய தங்கை - அவள்
இனிய பெயரோ மங்கை.

என்னுடைய தம்பி - அவன்
என்றும் தங்கக் கம்பி

என்னுடைய பாட்டி - அவள்
எவர்க்கும் தருவாள் பேட்டி.'

- பள்ளி சஞ்சிகையில் ஒரு எட்டாம் வகுப்பு மாணவன்.

# கொரிக்கவும் சிரிக்கவும்

### கோமதி சுவாமிநாதன்

## அனுபவ வெடி

☐ மைசூர் மந்திரி சபைக் கூட்டங்களுக்குத் தாமதமாக வரும் மந்திரிகளிடமிருந்து, நிஜலிங்கப்பா முதல்வராக இருந்த காலத்திலிருந்தே ஒரு தடவைக்கு ஐந்து ரூபாய் விதம் அபராதம் வசூலிக்கிறார்கள். இப்போது அதிகப்படியாக அபராதம் செலுத்தியவர்கள் ஜாபிதாவில் இப்போதைய முதல்வர் வீரேந்திர பாட்டீலும், நிதி மந்திரி ராமகிருஷ்ண ஹெக்டேயும் முதல் இரண்டு இடங்களைப் பெற்றிருக்கிறார்கள். - செய்தி.

☐ பொது நிகழ்ச்சிகளில் கலந்துகொள்ளச் சம்மதித்துவிட்டுப் பிறகு சாவகாசமாக வந்து சேரும் தமிழக மந்திரிகள் இந்த மாதிரி ஒரு கணக்கட்டுப்பாட்டை அமுலுக்குக் கொண்டு வரலாமே என்று கூறுகிறார், ஒரு காத்திருந்து அலுத்த அனுபவஸ்தர்.

## பழிக்குப் பழி

இங்கிலாந்தில் ஜே.பி. கரான் என்ற பிரசித்திபெற்ற வழக்கறிஞர் இருந்தார். நீதிஸ்தலங்களில் அவருக்கு நல்ல மதிப்பு. ஆனாலும் ஃபிட்ஸ்கிப்பன் என்ற நீதிபதிக்கு மாத்திரம் கரானிடம் ஒருவித எரிச்சல்.

ஒரு வழக்கில், நீதிபதி கிப்பன் முன் ஆஜரான கரான் சம்பந்தப்பட்ட சட்டத்தை, ஒரு பாமரனுக்கு விளக்கம் கொடுப்பது போல வெகு எளிமையாக விவரிக்க ஆரம்பித்தார். நீதிபதிக்குக் கோபம் வந்தது. "எனக்குச் சட்ட பாடம் சொல்லித் தர முயலுகிறீர்களா மிஸ்டர் கரான்!" என்று சீறினார்.

கரான் ஒருகணம்கூட தயங்காமல், "என்னால் முடியாது என்று நிச்சயமாகத் தெரிந்த ஒரு விஷயத்தில் நான் ஈடுபடுவதில்லை" என்றார் நிதானமாக. கிப்பன் முகம் சுருங்கியது. இதற்குப் பழி வாங்கக் காத்துக் கொண்டிருந்தார்.



ஒருநாள் கரான் வேறு வழக்கில் ஜூரர்களைப் பார்த்துத் தம் கட்சிக்காரன் சார்பில் பேசிக் கொண்டிருக்கும் போது கோர்ட் கட்டடத்துக்கு வெளியேயிருந்து ஒரு கழுதை கத்தும் குரல் பலமாகக் கேட்டது. நீதிபதி கிப்பன் கையை அமர்த்தி, 'ஒரு சமயத்தில் ஒருவர்தான் பேசலாம்' என்று கிண்டலாகச் சொன்னார். அவ்வளவுதான்! கோர்ட்டே சிரிப்பொலியில் மூழ்கியது. சிரிக்காதவர் கரான் ஒருவர்தான்! கரான் காத்திருந்தார்.

நீதிபதி கிப்பன் ஜூரர்களிடம் பேசிக் கொண்டிருந்தபோது அதே கழுதை மீண்டும் கத்த ஆரம்பித்தது. கரான் அமைதியுடன் எல்லோருக்கும் கேட்கும்படியாக, "நீதிஸ்தலத்துக்குள் எதிரொலி எவ்வளவு அருமையாக ஒலிக்கிறது!" என்றார்.

இப்போது சிரிக்காதவர், சிரிக்க முடியாதவர், நீதிபதி கிப்பன்தான்!

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-31
Managing Editor: T. Sadasivam

# CENTURY RAYON makes YOUR HOME



# A SWEETER HOME!

Century Rayon provides furnishings—rich and glowing, or sober and subdued; in staid, traditional designs as well as in madly modern designs; curtains, upholstery material, bed-sheets, pillow-covers...for your family a rich assortment of Cenray fabrics—sarees, dress materials, suitings, shirtings...better in texture, better in colours and designs than any other available fabrics.

Cenray, a Division of Century Rayon, continuously devotes itself to the development of new designs, new mixings, new blends, to promote and popularise the use of rayon. It provides technical counsel and marketing facilities to manufacturers of rayon fabrics who adhere to the exacting standards laid down by Century Rayon's Research and Consumer Service Section. Century Rayon, in short, helps make life not only colourful and comfortable, but also much more exciting!




**CENTURY RAYON,**
Industry House,
159, Churchgate Reclamation,
Bombay 20.

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon



